

**வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே**
**செந்தாமரைக்கண்செங்கனிவாய் நாலதோளமுதே! யெனதுயிரே!**
**சிந்தாமணிகள்பகரல்லைப்பகலசெய் திருவேங்கடத்தானே!**
**அநதோவடியேனுனபாதம் அகலகிலலேனிறையுமே.**

கைக்கு எட்டிஞறபோலே யிருநது எட்டாதவனே! எட்டாதவன் போலிருந்து கிட்டி நிற்பவனே! செந்தாமரை போன்ற திருககணகளையும் செங்கனி போன்ற திருப்பவளத்தையும நானகு திருத்தோல்களையுமுடைய பரம போக்கியனே! எனக்கு உயிரானவனே! சிறந்த ரதனங்களின் ஒளி யானது இரவையும் பகலாக்கு மிடமான திருமலையில் வாழ்பவனே! ஐயோ உனது திருவடிகளை அடிமைச் சுவடறிந்த நான் ஒரு க்ஷணகாலமும் பிரிந் திருக்க வல்லேனல்லேன்.

**(திருவாய்மொழி 6-10-9)**

# ஸப்தகிரி

அக்டோபர் - 1989

தனிப்பிரதி ரூ. 1 மலா 20

வருடச சநதா ரூ. 12 இதழ 5

## உள்ளுறை



---

### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : திருமலைக கோயில் உத்சவா - திருமலை பிரம்மோத்சவ அலங்காரம.

முதல் உள்அட்டை — பெரிய சேஷ வாகனத்தில் உத்சவர்

2-வது உளஅட்டை . மோகினி அவதாரம

(பிரம்மோத்சவ அலங்காரங்கள.)

பின்னட்டை — ஸ்ரீ மகிஷாசுரமர்த்தினி-சித்திரம கே. ஜெகதீஷ்.

சிறப்பாசிரியா

திரு. சிஎச். வெங்கடபதிராஜு I A S., செயலாட்சித தலைவர், தி.தி.தேவஸதானம, திருபபதி.

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி, மேலாளர், தி.தி. தேவஸ்தான அச்சகம, திருப்பதி.

ஆசிரியா

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மனது சிறிதே சஞ்சலபபட்டாலும், சிறு பிரச்சனைகள் மனதிலும், குடும்பத்திலும் ஏற்பட்டாலும் 'ஒரு தடவை திருப்பதிக்குச் சென்று வருகிறேன' எனறு தோளில் ஒரு துண்டுடன் திருப்பதிக்குப் புறப்பட்டுவிடும் நிகழ்ச்சி நம்மிடையே நாளும சாதாரணமாக நடைபெறும ஒனருகும். திருப்பதிக்குச் சென்று வருவோரின் தவிர்க்க முடியாத அனுபவம் ''வரிசையில் காத்திருப்பது'' எனபதேயாகும. போக்குவரத்திற்கும், தலைமுடி காணிக்கைச் செலுத்தவும், தரிசனத்திற்கும், லட்டு, வடை பிரஸாதத்திறகும, உணவுககும யாத்திரிகாகள ஏதோ ஒரு கட்டத்தில் சில பல மணி நேரங்கள் வரிசையில் காததிருப்பது எனபது அவாகள் எதிர்கொள்ளும் அனுபவமாகும் இவ்அனுபவம் பலரை விரக்தி அடையச் செய்தாலும, வெறுப்படையச் செய்தாலும இத்தகைய உணர்வுகள் யாவும் சிலபல நாட்களில் மறக்கபபட்டு, மறுபடியும் திருபபதிககுச செல்ல வேணடும் என்ற எண்ணமும் அல்லது வந்து போகும சூழ்நிலையும் அவர்களைவிட்டுச் செல்வதில்லை என்பதே நிதர்சன உண்மையாகும.

இந்நிலைக்கு அவாகள் தள்ளப்படுவது எது காரணமாக இருக்கும்? இன, மொழி, இட, சமய போன்ற சமூக வேறுபாடுகள் மறறும பொருளாதார ஏற்றத தாழ்வுகள் யாவற்றையும் கடந்து நாளதோறும் பலலாயிரக்கணக்கான யாததிரிகாகளை-பக்தாகளை திருமலைக கோயில பெரிதும் ஈர்த்து வருகினறது என்றால் அதறகுக் காரணம திருமலையில் நிலவிவரும சுகாதாரமான சூழ்நிலை, தங்கு வசதிகள, உணவு வசதிகள் இயறகைச் சூழல ஆகியன மட்டுமல்ல. இவற்றையெல்லாம கடந்து, காவியங்கள் பாராட்ட, புராணங்கள் புகழ்பாட, இலக்கியங்கள் இசைபாட, மூவேந்தர், பலலவா, விஜயநகரப் பேரரசு போன்ற மாமன்னர்கள முதல் குறுநில மன்னர்கள் வரை, முகமதிய, ஆங்கிலேயே ஆட்சியாளர்களாலும் பணிந்து. காதது, வளாககபபட்ட தொன்மையும, பெருமையும, சிறப்பும கொண்டு இந்திய மண்ணின் மாண்பினைக் கூறிடும ஒரு கோயிலாக - இருவினைபபயன்களையும் களைந்திடும் அவ்நெடியோன அருளாட்சிப் புரிந்திடும் திருக்கோயிலாக-விளங்குவதுதான் உண்மைக் காரணமாகும்.

கலியுக வைகுண்டமாக விளங்கிடும் இத்திருமலை நாளும் விழாக்கோலம் பூண்டாலும் பிரமமோத்சவம் என்றழைக்கப்படும ஆண்டுக்கொரு முறை நடைபெறும் பெருவிழாவினபோது திருமலையும், திருமலைக் கோயிலும் இந்து சமயத்தின ஒரு 'எழுச்சித் தலமாக' விளங்கிடும் எனபது கேட்டவர், கூறியவர் பேசசலல, வந்தவாகளின் அனுபவ வியப்பாகும். பிரம்மதேவனால் முதன் முதலாக அவ ஆதிநாயகனுக்கு ஏறபடுத்தப்பட்ட விழாவாகக கருதப்படும் இவ் விழாவிற்கென்று ஒரு தனிச சரிததிரம் உண்டு என்பதை சோழா கால கலவெட்டுக்கள் நமக்குக் கூறும் செய்தியாகும. அந்நியா கால ஆட்சியின் போதும அவாகள் ஆதரவாலேயே நடைபெறற பெருமை உண்டு இப்பிரமமோத்சவத்திற்கு! மாமனனர்கள முதல் சாமானயன வரை அன்று முதல இனறு வரை இக்கோயிலுக்கும, இக்கோவிநதனுக்கும் தந்திட்ட பொன்னும பொருளுமதான எத்தனை? கோயிலைத் தரைமடடமாக்க வநதவர்கள பின்னர் தரையில் விழுந்து வணங்கிய நிகழ்ச்சிகள் தாம எததனை? விரகதியுடன் வந்தவர்கள பின்னர் பரபகதியுடன் திரும்பியவாகள்தாம் எத்தனை! பகலில் கூடி நிந்தனை செய்தவாகள் இரவில வநது வநதனை செயதவர்களதாம எததனை! இன்னும எத்தனையோ சிறப்புக்கள் உண்டு இவ்வேதம் புகழ மலர்மகள நாயகனுக்கு!

இவ்வாறு புரவலாகளாலும புலவாகளாலும பணிந்தேததப்பட்ட பரமனின் இவவாண்டு பிரம்மோத்சவம் இம்மாதம நடைபெற உளளது மககள் விழாவாகக் கொணடாடப்படும இபபிரம்மோத்சவத்திற்கு நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருநது பகதாகள திருமலையில கடலெனக் கூடுவர். இபபத்து நாட்களினபோது திருமலை ஒரு வேள்வித் தலமாக விளங்கி இநதிய மண்ணின சமய, ஆன்மீக, கலாசார உணாவுகளின் உறைவிடமாகத் திகழும. இதுபோது திருமலைககு வரும யாத்திரிகாகளை மனதிற் கொணடு அவாகளுக்கு உடனடியான எளிய போக்குவரத்து வசதிகளை மேற்கொள்ளும வகையில் உட்தமிழகததின பல்வேறு பகுதிகளைக் குறிபபாக சென்னை மறறும் சித்தூா மாவட்டத்தைச சுற்றியுளள நகரஙகளை திருப்பதியுடன இணைத்துடன வகையில சமபந்தப்பட்ட மாநில போக்குவரத்துக கழகங்களின் உதவியுடன் அதிக அளவில பேருநதுகளை செயறபடுததவும, திருமலையில விரைவாக தரிசனம் பெறவும், பிரஸாதஙகள எல்லோருககும கிடைககவும, திருபபதி-திருமலை நடைபாதை வழியிலும, திருமலையிலும தகுநத மருத்துவ, குடிநீா, மறறும் பாதுகாபபு ஏறபாடுகளை மேறகொளளவும, இபபதது நாடகளின்போது திருமலையில் அனனதான திடடததினகீழ நாள ஒனறுக்கு சுமாா இருபதாயிரம யாததிரிகாகளுககு இலவச உணவு வழஙகவும் தேவஸ்தான மேலாண்மை தகுந்த முயறசிகளை எடுததுளளது. இதுபோது யாததிரிகள தஙகள ஒத்துழைபபினை தததுதவவேண்டும என்றே மேலாண்மை விருமபுகினறது.

மேலும் இப்பிரமமோதசவத்தினபோது, மூனறுண்டுகளுக்கு ஒரு முறை கலைக்கபபடும தி. தி. தே பொறுப்பாண்மைக குழுவின பதவிக காலமும முடிவடைவதால. இதுபோது இவபொறுபபாணமைக் குழுவின தலைவர் மற்றும் உறுப்பினர்களின பேராதரவாலும, அயராத உழைப்பாலும், ஆாவத்தாலும தேவஸ்தான மேலாண்மையால் பல திட்டஙகள நிறைவேறறபபட்டுளளன. திருபபதிககு இரயில மறறும பேருந்து வசதிகள் பெருககப்பட்டதும, திருமலைக் கோயிலின ஆஜித சேவைகளின் கட்டணஙகள குறைக்கபபட்டதும் புதிய ஆஜித சேவை ஒனறு புகுத்தப்பட்டதும். ஆதரவறற சில கோயிலகள தி தி. தேவஸ்தானததின நேரடி நிாவாகத்தினகீழ கொண்டு வரப்பட்டதும. நாட்டின் பலவேறு பகுதிகளில் புதிய திருமண மணடபஙகள கட்டப்பட்டதும, வேதஙகளின் பெருமையினையும், வேத விற்பன்னர்களின சிறபபினையும காபபாறறி மேலும அவை உயர்வடையுமபடி திருமலையில தர்மகிரி எனும்இடத்தில் குருகுலத்திற்கொப்ப வேத விகஞான பீடம எனும அமைபபு உருவாக்கபபட்டதும போனற பல நறதிட்டங்கள செயலாக்கப்படவும், மேலும பல செயறதிடடஙகள உருவாகக வழிவகுக்கவும செய்த பொறுபபாண்மைக் குழுவுக்கு தேவஸ்தானம் தன் நன்றியைத் தெரிவித்துக் கொணடு, குழுத தலைவர் மறறும் அதன் உறுபபினாகளையும், இவவளர்ச்சிகளுக்கு நேரிடையாகவும், மறைமுகமாகவும பல வகைகளில தஙகள திருத்தொண்டினை காலவரமபினறி ஆறறிவரும யாத்திரிகப் பொது மக்களை

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் குடியரசுத்தலைவர்

இந்திய குடியரசுத் தலைவர் திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் தம் துணைவியாருடன் 26-8-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். அன்று மாலை கோயில் மரியாதைகளுடன் குடியரசுத் தலைவர் அவர்கள் தி. தி. தேவஸ்தான உயர் அலுவலர்களால் வரவேற்கப்பட்டார்.

கோயிலில் அவருக்கு தி.தி. தேவஸ தான அன்னமாச்சார்யா திட்டத் துறையின் சார்பாக வெளியிடப் பட்ட ஒலிநாடாக்களின தொகுப்பு ஒன்று தி. தி. தேவஸ்தான செயலாட்சித தலைவரவர்களால் வழஙகப்பட்டது. பிறகு திருமலை யில் தி.தி. தேவஸ்தானத்தாரின் 'ஸப்தகிரி சத்ராலு' எனும் தர்ம சத் திரத்தின் மூன்றுவது பகுதியினை குடியரசுத்தலைவர் திறநதுவைத்தார். அடுத்தநாள் காலை ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதியில் வைக்கப்பட் டிருந்த தி. தி. தேவஸ்தான சமய நூல் காட்சி அரங்கினை பார்வையிட் டார். அதுபோது சிறுவர்கள் பயன் பெறும்வகையில் சமய நூல்களை வெளி யிட்ட தி. தி. தேவஸ்தானத்தாரின முயற்சியினைப்பெரிதும்பாராட்டினர். மேலும் தேசிய, உலக அளவில் இந்து சமய கலாசார மேம்பாட்டிறகாக தி. தி. தேவஸ்தானம் ஆற்றிவரும் அரும்பணிகளையும், திருமலையில் செயல்பட்டு வரும நித்ய அன்ன தான திட்டததையும புகழ்ந்து பேசி னர். பிறகு திருமலையில் உள்ள அரிய புவியியல் கற்பாலத்தினைப் பார்வையிட்டார்.

குடியரசுத் தலைவா அவாகளின திருமலை வருகையினைக் குறிப்பிடும் வகையில் திருமலையில் இரணடு வகை யான செடிகள் அனறுரைக் கொணடு நடப்பட்டன.

## திருமலையில்

ஆநதிர மாநில ஆளுநர் திருமதி குமுத்பென் ஜோஷி, தமிழ்நாடு உயர்மன்ற நீதிபதி திரு. மோஹன், முன்னுள் இந்திய குடியரசுத் தலைவர் டாக்டர் என். சஞ்சீவிரெட்டி ஆகி யோர் சென்ற மாதத்தின் போது பல்வேறு தேதிகளில் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித் தனர்.

ஃ ஃ ஃ

கல்கத்தாவைச் சார்ந்த பிரபல தொழிலதிபர் திரு. ஆர். பி. கோயங்கா அவர்கள் திருமலைக் கோயிலிலுளள ஸ்ரீதேவி, பூதேவி உத்சவ விகரகங்களுககு தஙகக கிரீ டம் செய்ய ரூ. 10 இலட்சமும், ஸ்ரீ மலையப்பசுவாமிககு சூர்யகடாரி செய்ய ரூ. 5 இலட்சமும், மூலவருக்கு வைரம் பதித்த தோள்பட்டைகள் செய்ய ரூ. 15 இலட்சமும வழங் கினர்

ஃ ஃ ஃ

சென்ற மாதம் பக்தர் ஒருவர் கோயில் உத்சவருக்கு அணிவிக்கும் வகையில் சுமார் 3 கி.கி. எடையுள்ள தங்கத்தாலான கிரீடம், தோள்பட் டைகள், சங்கு சக்கரங்கள், ஹஸ்தம், பாதம் ஆகியவற்றைத் தன் காணிக் கையாக உண்டியலில் செலுத்தி யுள்ளார்.

## புதிய ஆர்ஜித சேவை

திருமலைகோயிலில் ஸ்ரீ மலையபப சுவாமிக்குச் செய்விக்கும் வகையில் அபித்யேக அபிஷேகம் எனும் புதிய ஆர்ஜித சேவை ஒன்று மேலாண்மை யால அணமையில் புகுத்தப்பட்டுள் ளது. நபர் ஒருவர் ரூ. 2000/- செலுத்தி பக்தர்கள் பங்கேற்கும் இவ்வுத்சவம் முதன் முதலாக சென்ற மாதம் 6, 7, 8 தேதிகளில் மூன்று நாட்களுக்கு நடைபெற்றது. இது போது கிருஹஸ்தரை சேர்நத 5 நபர்கள் அனுமதிக்கப்படுவா. கிரு ஹஸதர்கசு ஒரு வஸத்ரம், ஒரு லட்டு ஒரு வடை பிரசாதமாக வழங்கப் படும்.

ஃ ஃ ஃ

திருமலைக் கோயிலின் இவ்வாண் டின வருடாந்திர பவித்ரோதசவம் 13-8-89 முதல் 15-8-89 வரை வெகுச் சிறப்பாக நடைபெற்றது. இவ்வாண்டு ஒவ்வொருவரும் ரூ. 5000/- செலுததி 104 கிருஹஸ் தர்கள் பங்கேற்றனர்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

ஆந்திர மாநிலத்தின் கிராமங்களி லுள்ள கல்வி அறிவில்லாத சாமான் யர்கள் பலரும் பயனுறும்வகையிலும் அவர்களிடையே இந்து மதத்தின் பெருமையைப் பரப்பிடும் வகையி லும ஒலி மற்றும் ஒளிபரப்புக் கருவி களைக கொணட எட்டு "வீடியோ ரதங்களை" தி.தி. தேவஸ்தான தர்ம பிரசார பரிஷத் ஆதரவில் வாங்குவ தறகு ரூ. 8 இலட்சம ஒதுக்கப்பட் டுள்ளது.

ஃ ஃ ஃ

திருமலைக்கோயில் வைகானஸ ஆக மத்தின் ஆஸ்தான பண்டிதராக திரு. அப்பிகட்ல வி. தேசிகாசார்யலு அவாகளும், திருச்சானூர் பஞ்சாத்ர ஆகமத்தின் ஆஸ்தான பண்டிதராக திரு. பெனுமூடி பி. லக்ஷ்மி நரசிம்மா சார்யலு அவர்களும் மறறுமொரு ஆண்டிற்கு தி. தி. தேவஸ்தானத் தாரால நியமிக்கப்பட்டுள்ளனர்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநில முதல்வரின் சிறப்பு ஆலோசகரான திரு. சி. வெங்கட ரமணு ரெட்டி அவர்களை விரைவில் திருமலையில் நிறுவப்பட இருக்கும் தி. தி. தேவஸ்தான அரும்பொருட் காட்சியக கட்டிடவேலைகள் சம்பந்த மாக ஆலோசனைகள் வழங்குவதற் காக கௌரவ ஆலோசகராக தி.தி. தேவஸதானம் நியமித்துள்ளது.

ஃ ஃ ஃ

"ஸ்ரீநிவாசா கல்யாணம்" எனும் பன்னிரணடு நாட்டியநாடக நிகழ்ச்சி களை ஹைதராபாத் கூசசுப்புடி கலைக் குழுவினர் நடத்தத தி.தி. தேவஸ்தான மேலாணமை ரூ. 2 இலட்சத்தினை முன பணமாக அககுழுவிற்கு வழங்க முடிவு செய்துள்ளது.



# திருமாலின் சயனத் திருக்கோலங்கள்

திரு. எம். இராஜகோபாலன்,
சென்னை —90.

ஐந்து நிலைகள் :

காக்கும் கடவுளான திருமால் உலகில் உள்ள உயிர்களுக்கு நலவழி காட்டும் நோக்கத்துடன் ஐந்து நிலைகளில் தோன்றுகிறார். அவை பரத்துவம், வியூகம், விபவாவதாரம், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் எனப்படும். பரமபதமாக வைகுந்தத்தில் எழுந்தருளியுள்ள நிலையே பரத்துவமாகும். பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள தன்மையே வியூக நிலையாகும். அவதாரங்களாக உலகில் அவதரித்துத் தீமையை ஒழிப்பதே விபவநிலையாகும். வழிபடுவோரின் மனதில் குடிகொண்டு அருள் புரியும் தன்மையே அந்தர்யாமித்துவமாகும். ஆலயம், மடம், இல்லம் போன்ற இடங்களில் தெய்வத் திருவுருவங்களாகத் தோன்றும் நிலையே அர்ச்சாவதாரமாகும்.

அர்சசாவதாரத் தோற்றங்கள் :

சைவ ஆலயங்களில் சிவபெருமானின் குறியீடான இலிங்க வடிவில் மூலவர் காட்சியளிப்பது வழக்கம். வைணவ ஆலயங்களில் திருமாலின் குறியீடான சாளக்கிராமம மூலஸ்தானத்தில இடம் பெறவில்லை திருமாலின் திருவுருவங்களே மூலவராகப் பூசிக்கப்படுகின்றன. இவ்வாலயங்களில் மூலவர் நின்ற நிலை, அமர்ந்த நிலை படுத்த நிலை, ஆகிய மூன்று நிலைகளுள் ஏதாவது ஒரு நிலையில் தோற்றம் கொண்டுள்ளார். இவற்றை நின்ற, இருந்த, கிடந்த நிலைகளாகச் சமய அறிஞர்கள் குறிப்பிடுவர். அர்ச்சாவதார நிலையில் காட்சியளிக்கும் திருமால், நின்ற கோலத்தில் ஸ்தானகமூர்த்தியென்றும், அமர்ந்த நிலையில் ஆசன மூர்த்தி என்றும், கிடந்த தோற்றத்தில் சயன மூர்த்தி என்றும் அறியப் பெறுகிறார். இம்மூன்று நிலைகளிலும் காட்சியளிக்கும் மூலமூர்த்தியை யோகமூர்த்தி, போகமூர்த்தி, வீரமூர்த்தி, அபிசாரிக மூர்த்தி என்று நான்கு வகைகளாகப் பகுப்பர். இந்த நால்வரையும் வெவ்வேறு நிலைகளில் வெவ்வேறு தரப்பட்டவர்கள் பூசிக்கவேண்டும் என்பது விதி. மனதைக் கட்டுப்படுத்த வல்ல யோகிகளுக்கு உரியவரே யோகமூர்த்தி. சிறந்த வேலை வாய்ப்புகள் பெற விரும்புவோர் போகமூர்த்தியை வணங்கவேண்டும். வலிமையும், வீரமும்பெறவிழைவோர் வீரமூர்த்தியைப் பூசிக்கலாம். பகைவர்களை வெற்றிகொள்ள விரும்பும் அரசர்களும், அதிகாரிகளும் அபிசாரிக மூர்த்தியை வழிபட வேண்டும். ஒவ்வொரு நிலையிலும் கோலம் கொண்டுள்ள பெருமானைச் சுற்றி தேவர்கள், முனிவர்கள் போன்றோர் வணங்கிய வாறு தோற்றமளிக்கவேண்டும். இவ்வாறு குழுமியுள்ளவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு உத்தமம், மத்தியமம், அதமம என்று மூவகையாக இறைவனைப் பாகுபடுத்துவர்.

ஆதார நூல்கள் :

சிவபெருமானின் பலவகைத் தோற்றங்களை விளக்கும் ஆகம, சிற்ப நூல்கள் போல் திருமாலின் பலவகை வடிவங்களை விவரிக்கப் போதிய நூல்கள் இல்லை. வைகானச ஆகமத்திலும் மத்வாச்சாரியாரின் தந்திரசாரம் போன்ற சில நூல்களிலும் திருமாவின் உருவம் பற்றிய குறிப்புகள் உள்ளன. இராமானுஜரால் பரப்பப்பட்ட பஞ்சராத்திர ஆகமத்தில், 108 சம்ஹிதைகள் இருந்தன. அவற்றுள் சில அழிந்து விட்டதாக



சயனமூர்த்தி-திருமெய்யம்.

வேதாந்த தேசிகரே கூறியுள்ளார். எஞ்சிய பகுதிகளிலும் வெகுசில சம ஹிதைகளே நூல் வடிவில் அச்சேறி யுள்ளன. ஸ்யாத்வாத சம்ஹிதை, நாரத பஞ்சாரத்ர சம்ஹிதை, பிரகத் பிரம்ம சம்ஹிதை ஆகியன அச்சேறி யுள்ளன. ஆனால் அவற்றில் விஷ்ணு வின் உருவமைப்பு பற்றிய செய்தி கள் இடம் பெறவில்லை. ஆயினும் வைகானச ஆகமத்தில் வைணவத் திருவுருவங்கள் பற்றிய விரிவான செய்திகள் இடம் பெற்றுள்ளன. இக்கருத்துக்களை மையமாகக கொண்டே மாமல்லபுரம், பாதாமி போன்ற இடங்களிலுள்ள குடவரைக் கோயில்களில் திருமாலின் பல்வேறு திருவுருவங்களைச் சிற்பங்களாக வடித் தனர்.

சயனமூர்த்தியின வடிவங்கள .

*1)* யோக சயனமூர்த்தி : இரு கரங்களைப் பெற்றுள்ள இம்மூர்த்தி அனந்தன் எனும் பாயின் மீது சய னித்துள்ளார். உடலின் காற்பகுதி சற்றுத் தூக்கலாகவும், எஞ்சிய முக் காற் பகுதி நெடுஞ்சாணுகவும் இருக் கும். வலது கரம் சேடனுகிய பஞ் சணைமீது சாய்ந்தவாறு, தலைமுடியை அலங்கரிக்கும் கிரீட மகுடத்தைத் தொடும். மற்ருெரு கரம் சற்றே மடிந்து கடக முத்திரையுடன் காட்சி யளிக்கும. சில சமயங்களில் இடது கரம் உடலோடு சமமாக இடுப்பைத் தொட்டவாறு அமைநதிருக்கும். வலது கால் நீணடிருக்கும். இடது கால் சற்றே மடிநதிருக்கும். கண்கள் அகலத்திறநதிருககும். பெருமாளின் உடலுக்கு அழகிய ஆபரணஙகள மெருகு ஊட்டும். கருமையும், மஞ் சளும் கலந்த வண்ணத்தை இவ்வுரு வம் பெற்றிருக்கும்.

சயனமூர்த்தியின் திருவடிகளுக்கு அருகே மது, கைடபர் ஆகிய அசுரர் கள் உள்ளனர். பெருமாளுக்கு அரு கில் பிருகு, மார்க்கணடேயர் ஆகிய ரிஷிகள் இடம்பெற்றுள்ளனர். நாபிக் கமலத்திலிருந்து தோன்றும் தாமரை மீது நான்முகன் அமர்நதிருப்பார். இவ்வுருவின் திருவுருவத்திற்கு மேல்



போக சயனமூர்த்தி-தியோதர்.

பின்புறச்சுவரில் ஆயுத புருஷர்கள், சப்தரிஷிகள், கருடர், விஷ்வக்சேனர் ஆகியோர் அஞ்சலி ஹஸ்தராகத் தோன்றுகின்றனர். வலது புறத்தில் நான்முகனும், இடது புறத்தில் சிவ பெருமானும் அமர்ந்துள்ளனர். இவ வாறு அனைத்துப் பரிவாரங்களுடன் காட்சியளிக்கும திருவுருவமே உததம வகுப்பைச் சோநத யோக சயன மூர்ததியாகும். சப்த ரிஷிகள், விஷ் வக் சேனா ஆகியோர் இடம் பெற வில்லையானல் அது மத்தியம வகுப் பைப் சார்ந்த சிற்பமாகும். சப்த ரிஷிகள், விஷ்வகசேனர் மட்டுமின்றி, மது, கைடபர் வழிபடும் முனிவர்கள் ஆகியோரும் இடம்பெருவிடில அச் சிற்பம அதம வகுப்பைச சார்ந்த தாகும்.

மாமல்லபுரத்தில் மகிஷாசுரமர்த் தினி குகையில் மத்யம வகுப்பைச் சார்ந்த யோகசயன மூர்த்தியைக் காணலாம். திருமாவின் தலை சற்றுத் தூக்கலாகவும், உடற்பகுதி அரவணை மீது நீணடும உள்ளது. வலது கரம் நீண்டு முடிவரை செல்லும். கடக முத்திரையைப் பெறறுள்ள இடது கரம முழங்கையளவில் மடிந்துள்ளது. இடதுகால மடிந்துள்ளது. வலதுகால் நீண்டுள்ளது. கிரீட மகுடம், ஹாரம், குணடலம், யக்ஞோபவீதம ஆகியன உடலை அலஙகரிக்கினறன. மது, கைடபா ஆகிய இரு அரக்கர்களும் கரங்களில் கதாயுதங்களுடன் தலையை முடிந்தவாறு தோனறுகின்ற னர். இருவரும் மகாவிஷ்ணுவைத் தாக்குவதற்கான சதித்திட்டத்தைத்



வடபத்ரசாமி-ஸ்ரீ வில்லிபுத்தூர்.

தீட்டுபவர் போல் அமைந்துள்ளனர். சக்கரம், கதை ஆகிய ஆயுத புருஷர்கள் இவ்வரக்கர்களைக் கண்காணிப்பது போல் மேற்பகுதியில் தோன்றுகின்றனர். பறப்பது போல் அவர்களின் திருவுருவங்களை வடித்துள்ள விதம் பாராட்டுக்குரியது. அரவணைக்குக்கீழ் பிருகு, மார்க்கண்டேயர் ஆகியோர் முழந்தாளிட்டவாறு காட்சியளிக்கின்றனர். பூமி தேவியையும் அருகே காணலாம். பத்ம புராணத்திலும், மார்க்கண்டேய புராணத்திலும் வருணிக்கப்பட்டுள்ள மது, கைடபர் வதம் எனும் சரிதை இவ்வாறு அற்புதமாகச் சிற்பவடிவில் வடிககப்பட்டுள்ளது.

2. போகசயனமூர்த்தி

இரண்டு அல்லது நான்கு கரங்களுடனும், திடமான சரீரத்துடனும், கரிய வண்ணத்துடனும் போக சயனமூர்த்தி காட்சியளிப்பார். பெருமானின் தலைப்பகுதி சற்று தூக்கிய வாறும், உடற்பகுதி சர்ப்பத்தில் சாய்ந்தவாறும இருக்கும். வலது கரங்களும் ஒன்று தலையையோ அல்லது கிரீடத்தையோ தொடுமாறு நீண்டிருக்கும். இடது கரம் ஒன்று உடலுக்கு இணையாகச் சாய்ந்தவாறு இடுப்பைத் தொடும. மற்றிரு கரங்களின் அமைபபு பற்றிய குறிப்பு இல்லை. திருமாலின் வலது கால் நீண்டிருக்கும். இடது கால் சற்றே மடங்கியிருக்கும். இரண்டு கால்களுக்கும் இடையே 20 அங்குல இடைவெளியும், பாதங்களுக்கிடையே நான்கு அங்குல இடைவெளியும், முழங்கால்களுக்கிடையே 14 அங்குல இடைவெளியும் இருக்க வேண்டும்.

சயனமூர்த்தியின் தலைக்கருகே அவரது தோள்களைத் தொடுமாறு லக்ஷ்மி அமைந்துள்ளாள். திருமகளின் வலது கரத்தில் தாமரை மலர் துலங்கும். இடதுகரம் கடக முத்திரையை காட்டும். திருமாலின் இடது திருவடியைத் தொடும் நிலையில் பூதேவி அமர்ந்துள்ளாள். பூதேவியின் வலது கரத்தை நீலோத்பல மலர் அலங்கரிக்கும். இடது கரம் கடக முத்திரையுடன் தோன்றும். சயனமூர்த்தியின் வலது புறத்தில் மார்க்கண்டேயரும், இடது புறத்தில் பிருகு முனிவரும் உள்ளனர். தென் பகுதியில் நான்முகனும், வடபகுதியில் சிவபெருமானும் அமர்ந்துளளனர். கருவறைக்குப்புறத்தே அமைந்துள்ள புரைகளில் விநாயகர் தென்புறத்திலும் துர்க்கை வடபகுதியிலும் இடம் பெற்றுள்ளனர்.

சயனமூர்த்தியின் காலடியிலுள்ள மது, கைடபர் ஆகிய இரு அவுணர்களும் மூர்க்கமான தோற்றத்துடன்



கிடந்த நம்பி-திருக்குறுங்குடி.

காட்சியளிக்கின்றனர். முழங்காலுக்குக் கீழேயுள்ள பகுதி ஆழ்கடலால் சூழப்பட்டுள்ளது. ஆதிசேடனின் சுவாசத்தில்வெளிப்படும் நச்சுக் காற்ருல் சற்று பீடிக்கப்பட்டவர்கள் போல அசுரர்கள் தோன்றுகின்றனர். பாய்ந்து தாக்கும் நிலையில் மதுவும், கைடபரும் உள்ளனர்.

திருமாலின் நாபியிலிருந்து வெளியாகும் தாமரை மலரில் பிரமதேவர் வீற்றிருக்கிருர். சுற்றிலும் ஐந்து ஆயுத புருஷர்கள், கருடன், ஆதவன் அஸ்வினி தேவர்கள், திங்கள், அஷ்டதிக்கு பாலர்கள் ஆகியோரின் சிற்பங்கள் இடம் பெற்றிருக்கும். நாரதரும், தும்புருவும குழந்தைகள் வடிவில் தோன்றுகின்றனர். அழகிய அப்சரஸ் ஸ்திரீகள் சாமரம் வீசியவாறு காட்சியளிக்கின்றனர். இவ்வாறு புடைசூழச் சயனத்திலுள்ள போகமூர்த்தி உததம வகுப்பைச் சார்ந்தவர். திக்பாலகர்கள், நாரதர், தும்புரு ஆகியோர் இல்லாவிடில் மத்தியம வகுப்பைச் சார்ந்தவராவார். முனிவர்களும், அப்ரஸ்களும் இடம் பெருவிடில் அதம வகுப்பைச் சேர்ந்தவராவார்.

மத்யம வகுப்பைச் சேர்நத போக சயனமூர்த்தியின் சிற்பத்தை ஜான்ஸி மாவட்டத்திலுள்ள தியோதாரிலுள்ள சிதைவுற்றுள்ள வைணவ ஆலயத்தில் காணலாம். பார்வையாளரின் வலதுபுறம் நோக்கிய தலையுடன் சயனமூர்த்தி காட்சியளிக்கிருர். சயனத்திலுள்ள உடலின் மேற்பகுதி சற்று உயர்ந்துள்ளது. பிற பகுதிகள் நாகப்படுக்கையில் சாய்ந்துள்ளன. ஆகமத்தில் கூறப்பட்டுள்ளவாறு முழு உடல் வளைந்த வில்போல் தோற்றமளிக்கின்றது. வலது கரங்களுள் ஒன்று தலையைத் தாங்குகிறது. மற்ருென்று படுக்கை மீது சாய்ந்துள்ளது. பெருமாளின் உடலை அலங்கரிக்கும் கிரீடமகுடம், குண்டலம், ஹாரம், கேயூரம், கடகம், வனமாலை ஆகிய அணிகள் மிக நுண்ணிய வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ளன. நாபிக்கமலத்தில் 4 சிரங்களுடனும் பிரம்மன் இடம் பெற்றுள்ளார். அவரது இடது கரத்தில் கமண்டலம் துலங்கும். வலது கரம் சின் முத்திரையைக் காட்டும். மானின் தோலை யஞ்ஞோபவீதம் போல உடலில் பூண்டுள்ளார். நான்முகனின் திருமுடியில் கிரீடம் உள்ளது. வலது புறத்தில் வஜ்ஜிராயுதம் ஏந்திய இந்திரன் ஐராவதத்தின் மீது அமர்ந்துள்ளான். அருகே இடபவாகனரான சிவபிரானும், மயில் மீதமர்ந்த குமரப்பெருமானும் உள்ளனா. திருமாலின் இடது திருவடி அருகே அமர்ந்துள்ள பூதேவியின் மடியின் மீது படிந்துள்ளது. பூதேவி திருமாலின் வலது திருவடியைத் தனது கரங்களில் ஏந்தியுள்ளார். கதை, தனுசு, சக்கரம், சங்கு, கடகம் ஆகிய ஆயுத புருஷர்களும் திருமகளும் அருகே உள்ளனர். கதாயுதங்களை ஏந்தியுள்ள மது, கைடபர் ஆகிய அசுரர்களைக் கடகம் எனும் ஆயுத புருஷன் தாக்குவது போல் சித்தரிக்கப்பட்டுள்ளது. குப்தர்களின் காலச் சிற்பக்கலைக்கு இச்சிற்பம ஒரு சிறந்த உதாரணமாகும்.

ஐஹோளேயிலுள்ள போக சயன மூர்த்தியின் சிறபமும் இதே வகையைச் சார்ந்ததே. மூலவரின் கால்கள் மடங்கியும் குறுக்காகவும் உள்ளன. அஞ்சலி ஹஸ்தரான மார்க்கண்டேயர், தலையில் மகுடம் அணிந்தவாறு, நீண்ட தாடியுடன் காட்சியளிக்கிருர். அருகே மலர் ஏந்திய பூதேவியின் திருவுருவம் உள்ளது. விஷ்ணுவிற்கு வலது புறத்தில் அஞ்சலி ஹஸ்தரான கருடர் ஒரு காலை முழந்தாளிட்டவாறு தோன்றுகிருர்.

3. வீரசயனமூர்த்தி :

கார்வண்ணரான வீரசயனமூர்த்தி நான்கு கரங்களைப் பெற்றுள்ளார். வலது கரங்களுள் ஒன்று சககரம தாங்கியுள்ளது. மற்ருென்று தலையணையாகப் பயன்படும். இடது கரங்களுள் ஒன்று சங்குஏந்தியுளளது. மற்ருென்று உடலுக்கு இணையாகப் பரந்துள்ளது. திருமாலின் திருவடிகளுக்கருகே நிலமடந்தையும், திருமகளும் அமர்ந்துள்ளனர். மது, கைடபர் ஆகிய அசுரர்கள் திருமாலுக்கு அஞ்சலி செலுத்துவது போல் அவரது திருவடிகளைப் பிடித்துக் கொணடிருப்பர். நாபிக்கமலத்தில் நான்முகன் அமர்ந்திருப்பார். இருபுறமும் பிருகு, மார்க்கணடேயர் காட்சியளிப்பர். பஞ்ச ஆயுத புருஷர்கள், கருடர். திங்கள், ஞாயிறு, சப்தரிஷிகள், 12 ஆதித்தர்கள், பதிஞெரு ருத்திரர்கள், அப்ஸரஸ், மங்கையர், கினனரர் சனகாதியா, தும்புரு, நாரதர், நானமுகன், சிவபெருமான் ஆகியோரின்



தர்ப்பசயனம்-திருப்புல்லாணி.

(43-ம் பக்கம் பார்க்க)

# தைலே லக்ஷ்மீ ஜலே கங்கா

தீபாவளிப் பண்டிகையின் சிறப்பினைப் பற்றி விஷ்ணு புராணம் ஸ்ரீமத் பாகவதம், சேஷ தர்மம், ஸ்ம்ருதி முக்தாபலம முதலிய நூலகள விரிவாகக் கூறுகின்றன. நித்யான்னிகம் எனற நூலிலும தீபாவளி மஹிமை கூறப்படுகிறது. கண்ணனிடம நரகாசுரன் மரண சமயத்தில் வரம் கேட்டதால் ஏற்பட்டது இத்தீபாவளித் திருநாள் என்பது யாவரும அறிநத ஒன்ருகும். இந்த புண்ய தினத்தில்தான் திருமகளைத் திருமால் திருமணம் புரிந்து கொணடதாக விஷ்ணு புராணம் கூறுகிறது. இதனுல் தீபாவளியை "லக்ஷ்மீ பரிணயதினம" என்றே அழைப்பதுணடு.

இப்படி விவாஹ கோலததில் இருந்த லக்ஷ்மீநாராயணனைத் தேவர்கள் ஒவ்வொருவராக நமஸ்கரித்தனர். அப்போது யமதர்மனும்பணிந்து வணங்கினுன். உடனே தேவி யமனிடம் இன்றைய தினம பண்டிகையை முறைப்படி கடைப் பிடிப்பவர்களது வீட்டில் 'நீ என் உததரவு இனறி உயிர்களைக்கவர்ந்து செல்லககூடாது' என்று உத்தரவு பிறப்பித்தாள. தர்ம ராஜனும் ஸ்ரீ தேவியின் ஆணைப்படியே நடப்பதாக வாக்கு அளிததான. இதனுல் மகிழ்நத அலைமகள் யமனிடம், 'இன்று உனனையும் மனிதர்கள ஆசாரத்துடன் சோபனக்ஷதைகளால பதினைகு தர்பபணங்கள் செய்து திருப்திசெய்விககட்டும்' என்று வரம் அளித்தாள். இதுவே யமதர்ப்பணமாகக கடைப்பிடிககப்படுகிறது.

தவிர தீபாவளியன்று நரகாசுரனை பகவான் வதம் செய்யச் சென்றபோது அரக்கர்கள் லக்ஷ்மீ தேவியைக் கவர்ந்து செல்ல முயற்சித்தனர். உடனே திருமகள் சூக்ஷ்ம ரூபம் தரித்து எணணையினுல் எரிந்து கொணடு இருந்த தீபத்தில் மறைந்து விட்டாள. நரகனை வதித்து திருமபிய பகவான அரக்கர்களைக் கொன்று தேவியை மீட்டார் என்று விஷ்ணுபுராணம் கூறுகிறது. இதனுல் தான அன்று தீபததையும் தைலத்தையும லக்ஷ்மீ ஸ்வரூபமாகக கொண்டாடுகிறோம. தீப பூஜையும வட இந்தியாவில் செய்யப்படுகிறது.

தீபாவளிப் பண்டிகையைக் கடைப்பிடிப்பதற்கும் விதிமுறைகள சாஸ்த்ரங்களில் கூறப்படுகின்றன. ஐப்பசி மாதம தேய்பிறையில் அமாவாசைக்கு முன் தினமான சதுர்த்தசியன்று பின இரவில் அதிகாலை மூன்று மணியளவில் துயில் எழவேண்டும். தீபாவளிக்கு முன் தினம் இரவே வீடு முழுதும் மெழுகிக் கோலமிட்டு அலங்கரிக்க வேண்டும். அதிகாலையில் எழுந்ததும் சுத்தமானதணணீரை எடுத்துக் குடம் அலலது தவலையில் நிரப்பிச் சந்தன குங்கும அட்சதைகளாலும் புஷபத்தாலும் அலங்கரிக்கவேணடும.

பிறகு ஆல், அரசு, புரசு, அத்தி, மாவலிங்கம் ஆகிய ஐநது மரத்தின் படடைகளையும் தணணீரில் சேர்த்துக் கலந்து வெந்நீர் தயார் செயயவேண்டும். வென்னீரைத் தயாரிதத பிறகு தைலஸ்னனததுக்கு முன்பு வீட்டில் உள்ள ஒவவொருவரும் நாயுருவிச் செடியினுல் தஙகளது தலையை மூன்று தரம் சுற்றிப் பிறரது காலடி படாத இடத்தில் அந்தச் செடியினை வீசி எறிந்து விட வேண்டும். இவ்விதம் செய்வதால நமக்கு ஆத்ம ரக்ஷையும, ஐச்வர்யமும் எற்படுவதாக சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இதற்குக்காரணம்என்னவென்றுல், ஒரு சமயம் வேத புருஷனை ப்ரும்ம தேவனிடம் இருந்து அரக்கர்கள் வேததைத் திருடிச் செல்ல எண்ணினுர்கள். உடனே நான்முகன் "அபாமார்க்கம்" என்று அழைக்கப்படும் நாயுருவிச் செடிகளாக மாறித் தன்னை மறைத்துக் கொண்டார். ஹரி நாராயணன் தோன்றி அரக்கர்களைக் கபடமாக வதம் செய்தார். இந்த புண்யதினத்தில்தான மேற்படி நிகழ்ச்சியும் நடைபெற்றது. வேத புருஷனையே ரட்சித்த காரணத்தால்தான இந்த நாயுருவிச் செடியை தீபாவளியன்று அதிகாலையில் நாமும் நமது ரட்சையாகப் பயன படுத்துகிறோம்.

---

திரு. பி. ரவிந்திரன், திப்பிராஜபுரம.

---

இவ்விதம் ரட்சை செய்துகொண்ட பிறகு தீபம் ஏற்றி, தைலம், வாசனுதி திரவிய பொடிகள், லேகியம், புத்தாடைகள். ஆபரணங்கள் முதலியவற்றை பகவானுக்கு சமர்ப்பிக்கவேண்டும். கண்ணனுக்கு புஷ்பஹாரங்கள் சார்ததி நிவேதனம், கற்பூரஹாரத்தி செய்யவேண்டும். பிறகுதைலஸ்னனம் செய்ய வேண்டும. எண்ணைத் தேய்த்துக் கொண்ட பிறகு வெனனீர் கலசத்தை ஒரு பலகையில் வைத்து புஷ்பங்களை ஸமர்ப்பிதது கைகளைக் கூப்பியபடி கீழககண்ட சுலோகததைக் கூற வேணடும.

"விஷ்ணோ. பாத ப்ரஸூதாஸி
வைஷ்ணவீ விஷ்ணு தேவதா
த்ராஹி நஸ்த்வேனஸஸ் தஸ்மாத்
ஆஜன்ம மரணாந்திகாத்
திஸர: கோட்யோர்த்த கோடீச
தீர்த்தானும் வாயுரப்ரவீத்
திவி புவ்யந்தரிக்ஷே ச தானிமே
ஸந்து ஜாஹ்னவி"

என்று பிரார்த்திக்க வேண்டும். இதன் பொருளாவது; ஹே மாதா! கங்காதேவி! நீ விஷ்ணுவின் பாதத்தில் தோன்றியதால் வைஷ்ணவியாகவும், விஷ்ணுவை அதி தேவதையாக உடையவளாகவும் இருக்கிறாய். ஜனனம் முதல் மரணம் வரை உள்ள பாவங்களிலிருந்து எங்களைக் காத்தருள வேண்டும். தேவலோகம், பூமி, அந்தரிக்ஷம் ஆகிய எல்லாவற்றிலுமாக மூன்றரை கோடி புண்ய தீர்த்தங்கள் ,உள்ளதாக வாயு பகவான் கூறி உளளார். அவை எல்லாம் தங்கள் கருணையால் எனக்காக இங்கு வநது அருளவேண்டும்' என்பதாம்.

மேற்கண்டவாறு பிரார்த்தித்து ஸ்னானம் செய்த பிறகு புத்தாடைகள், ஆபரணங்கள் பூண்டு ஸந்தி ஜபதபங்கள் முதலியவற்றை முடித்து லக்ஷ்மீ நாராயணனைப் புஷ்பங்களால் அர்சசிககவேண்டும். பலவகை இனிப்புகள், தின்பண்டங்கள், பழங்கள், தாம்பூலம் முதலியவற்றை நிவேதனம் செய்து கற்பூரம் காட்டவேண்டும் பகவானையும், பெரியோர்களையும் நமஸகரித்து வாணவேடிக்கைகளாலும் தீபங்களாலும் எங்கும் ஒளிரச் செய்யவேண்டும். குழந்தைகளை மகிழ்சசிப்படுத்த வேண்டும். இத் தீபாவளியை வடஇந்தியாவில் மஹா பலி தீபம், நரக சதுர்த்தசி, லக்ஷ்மீ குபேர பூஜை என்று மூன்று தினங்கள் கொண்டாடுகிறார்கள்.

பொதுவாக தர்ம சாஸ்த்ரத்தில் காலை 8–30 மணிக்கு முன்பும மாலை 5 மணிக்கு மேலும் தைல ஸ்னானம் செய்யக்கூடாது என்று விதித்து உளளது. தைலஸ்னானத்தை அப்யஙக ஸ்னானம் எனறும் மலாபகர்ஷணம் என்றும அழைப்பதுணடு. ஸ்ம்ருதிகளில் ஞாயிற்றுக் கிழமை எண்ணை ஸ்னானம் செய்வது மனதிற்கு வருத்தத்தையும், திங்கட்கிழமை தேஹ காந்தியையும், செவ்வாய்க் கிழமை மரணத்தையும், புதன் கிழமை செல்வத்தையும், வியாழக் கிழமை உடல் நலத்தையும், வெள்ளிக்கிழமை வறுமையையும், சனிக்கிழமை விரும்பியவற்றின் லாபத்தையும் அளிக்கும் என்று கூறப்படுகிறது. ஆனால் பெணகளுக்கு செவ்வாயும், வெள்ளியுமே உகநததாகக் கருதப்படுகின்றன.

தைல ஸ்னானத்துக்கு ஷஷ்டி, ஏகாதசி, துவாதசி, சதுர்த்தசி, அஷ்டமி, ப்ரதமை, பௌர்ணமி, அமாவாசை முதலிய திதிகளும், உத்தரம், கேட்டை,திருவோணம், திருவாதிரை முதலிய நட்சத்திரங்களும் உகந்தது அல்ல என்று தவிர்க்கப்பட்டுள்ளன. இவ்விதம விலக்கப்பட்ட திதி, வாரம், நட்சத்திரங்களில் எணணை நீராட நேரிட்டால் சிறிது நெய்யைக் கலநதுதேய்த்துக் கொள்ளவேண்டும். ஞாயிற்றுககிழமை செய்ய நேரிட்டால எணணெயுடன புஷ்பத்தையும, வெள்ளிக் கிழமை செய்தால் கோமூத்திரத்தையும், செவ்வாய்க்கிழமை சிறிது மணணையும் கலந்து நீராட வேணடும் என்று பரிகாரமும் கூறுகிறது. வியாழக்கிழமை எண்ணையுடன் அருகம்புல்லைச் சேர்த்து நீராடுவது நலம் தரும.

ஆனால் பொதுவாக சதுாததசியில் எண்ணை நீராடுவது கூடாது என்பது தீபாவளிக்குப் பொருநதாது. ஐப்பசி மாதம் தேய்பிறை சதுாத்தசியில் அமாவாசைககு முதல் தினம் விடியற் காலையில் நல்லெணணை தேய்த்துக் கொண்டு வென்னீரில் நீராடுவது கட்டாயமாகச் செய்ய வேணடிய கடமையாகக் கூறப்படுகிறது. இவ்விதம் செய்யாவிட்டால நரகத்தை அளிக்க வல்ல பாபம வநது சேரும் என்று சாஸத்ரம் கூறுகிறது.

"யஸயாம் ஹதச் சதுர்தசயாம நரகோ
விஷ்ணுநா நிசி
தஸ்யாமப்யஞ்ஜனம் கார்யம
நரைா நரக பீருபி:"

என்பது இதனை விளககுகிறது.

தவிர இந்த நரக சதுரித்தசியன்று உஷத் காலத்தில் சூரியன், சந்திரன், இருவரும் பெரும்பாலும் சுவாதி நட்சத்திரத்தில் ஸஞ்சரிப்பதால் இது மிகவும் புனிதமான தினம் என்றும், இநத நன்னாளில் எணணை நீராடல், லக்ஷ்மீ பூஜை, புத்தாடை உடுத்தல் முதலிய சுபகாரியங்களை அவசியம் செயயும்படியும் விதிக்கப்பட்டுள்ளது இதனை விஷ்ணு புராணத்தில்,

"ஸவாதி ஸ்திதே ரவாவிந்துா
யதிஸ்துாதி கதோ பவேத்
பஞசதவ குதகஸதாயீ க்ருதாப்யஙக
விதிா நர :"

என்று கூறப்படுகிறது. எனவே தீபங்களாலும், வாண வேடிக்கைகளாலும் பல தீபங்களை ஏற்றி லக்ஷ்மீ தேவிக்கு விசேஷ நீராஜனம் செய்தால் ஐசவர்யத்தை நிரம்பப்பெறறு வாழலாம என்பதை,

"நீராஜிதோ மஹாலக்ஷ்மீ மாசசயன
சரியமச்னுதே
தீபைா நீராஜிதா யதர
தீபாவளிரிதி ஸமருதா"

எனற வரிகள் தெளிவாக்குகின்றன.

மேலும் தீபாவளியில் எணணெயில் லக்ஷ்மீ தேவியும், ஜலத்தில் கங்கா தேவியும் வசிக்கிறாள் என்பதை,

"தைலே லக்ஷமீா ஜலேகஙகா
தீபாவலிதினே வஸேத"

என்று சாஸ்த்ரஙகள் கூறுகினறன. இத்தகைய தீபாவளி தினத்தில் ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணனை வழிபட்டு பண்டிகையை மங்களகரமாக அனுஷ்டித்தால் எல்லா நலமும் பெறுவோம் என்பது திண்ணம்.

"கஙகாதீர்தநதே மலின மனஸ:
பாதகம க்ஷாலயநதி"

எனறபடி சிவதயானத்தில் ஸதா ஈடுபட்ட மனத்தினனும், தாயுமான கங்காதேவியானவள இத்தீபாவளித் திருநாளில் நம் அனைவரது இல்லங்களிலும் எழுந்தருளி நமது மூவினைகளையும் அழித்துப் பனனலங்களையும அருளப் பிரார்த்திப்போமாக.

"கங்காதேவி நமஸதுப்யம சிவ சூட
விராசிதே
சரண்யே ஸர்வ பூதானும்
த்ராஹிமாம் சரணுகதம்" ★

# நவராத்திரியும் தேவியின் 108 க்ஷேத்ரங்களும்

தேவியை ஆராதிப்பதற்கு இது சிறந்த நாள். நவராத்ரியில் வஸந்த நவராத்ரி, சாரதா நவராத்ரி என இரண்டு வகையுண்டு. அச்சமயம் யமனது இரு கோரப்பற்கள் நோய் வடிவமாகி மக்களைக் கஷ்டப்படுத்தும். மாதாவை பூஜித்தால் நமக்கு நன்மை உண்டாகும்.

மஹிஷாஸுரன் என்பவன் அமரர் அனைவரையும் துன்புறுத்தினான். அவர்கள் தேவியை த்யாநம் செய்து கொண்டு அசைவற்று அமர்ந்து இருந்தனர், அதுவே கொலுவாகும்.

ஒவ்வொரு தேவர் உடலிலிருந்தும் ஒவ்வொரு நாளும் தேஜஸ் கிளம்பி நவமியன்று துர்க்கை ஸ்வரூபமாக அமைந்தது.

விஜயதசமியன்று மஹிஷனைக் கொன்று தேவரைக்காப்பாற்றினாள தேவி. அச்சமயம் அன்னையை ஆராதித்தால் வேண்டிய பயனைப் பெறலாம்.

திரு. பி. முரளிதரன், எம.காம்.,
*திருச்சிராப்பள்ளி-2*

ஸுசீலன் எனும் வைச்யனும், ஸ்ரீராமனும் நவராத்ரி பூஜையால் நன்மை பெற்றனர்.

விஜய தசமி அன்று துவக்கும் ஸகல கர்மாவும் ஜயத்தை அளிக்கும்.

## தேவியின் 108 க்ஷேத்ரங்கள் :

1 காசியில் விசாலாட்சி
2 நைமித்ஷத்தில் லிங்கதாரணி
3 பிரயாகத்தில் லலிதா
4 கந்தமாதநத்தில் காமாக்ஷி
5 மாநஸத்தில குமுதா
6 அம்பரத்தில் விச்வகாய
7 கோமந்தத்தில் கோமதி
8 மந்தரத்தில் காமசாரிணி
9 சைத்ர ரதத்தில் மதோத்கடா
10 ஹஸ்தனுபுரத்தில் ஜயந்தி
11 கான்யகுப்ஜத்தில் கௌரீ
12 மலய பர்வத்தில் ரம்பா
13 ஏகாம்பத்தில் கீர்த்திமதி
14 விச்வேச்வரத்தில் விச்வா
15 புஷ்கரத்தில் புருஹீதா
16 கேதாரத்தில் மார்க்கதாயினீ
17 ஹிமயமலையில் நந்தா
18 கோகர்ணத்தில் பத்ரகர்ணிகா
19 ஸ்தாநேச்வரத்தில் பவானி
20 பில்வலத்தில் பில்வபத்ரிகா
21 ஸ்ரீசைலத்தில் மாதவீ
22 பத்ரேச்வரத்தில் பத்ர
23 வராஹசைலத்தில் ஜயா
24 கமலாலயத்தில் கமலா
25 ருத்ரகோடியில் ருத்ராணீ
26 காலஞ்ஜரத்தில் காளி
27 மஹாலிங்கத்தில் கபிலா
28 மர்கோடத்தில் முகுடேச்வரி
29 சாளக்ராமத்தில் மஹாதேவி
30 சிவலிங்கத்தில் ஜலப்பிரியா
31 மாயாபுரியில் குமாரீ
32 ஸந்தானத்தில் லலிதா
33 ஸஹஸ்ராக்ஷத்தில் உத்பாலாக்ஷீ
34 கமலாக்ஷத்தில் மஹோத்பலா
35 கங்கையில் மங்களா
36 புருஷோத்தமத்தில விமலா
37 விபாசையில் அமோகாக்ஷி
38 புண்டரவர்த்தநததில் பாடலா
39 ஸுபார்ச்சலத்தில் நாராயணீ
40 விகூடத்தில் பத்ரஸுந்தரி
41 விபுலத்தில் விபுலா
42 மலயாசலத்தில் கல்யாணீ
43 கோடிதீர்த்தத்தில் கோடவீ
44 மாதலவனத்தில் ஸுகந்தா
45 கோதாச்ரமத்தில் திரிஸந்த்யா
46 கங்காத்வாரததில் ரதிப்பிரியா
47 சிவகுண்டத்தில் சிவானநதா
48 தேவிகாதடத்தில் நந்தினி
49 த்வாரவதியில் ருக்மணீ
50 பிருந்தாவனத்தில் ராதை
51 மதுரையில் தேவகீ
52 பாதாளத்தில் பரமேச்வரி
53 சித்ரகூடத்தில் ஸீதா
54 விந்த்யையில் விந்த்யாத்ரி வாஸினீ
55 ஸஹ்யாத்ரியில் ஏகவீரா
56 ஹரிச்சந்திரத்தில் சந்த்ரிகா
57 ராமதீர்த்தத்தில் ரமணா
58 யமுனையில் மிருகாவதி
59 கரவீரத்தில் மஹாலக்ஷ்மி
60 விநாயகத்தில் உமா
61 வைத்யநாதத்தில் அரோகா
62 மஹாகாலத்தில் மஹேஸ்வரி
63 உஷ்ண தீர்த்தத்தில் அபயா
64 விந்த்ய குகையில் அம்ருதா
65 மாண்டவ்யத்தில் மாண்டவீ
66 மஹேஸ்வபுரியில் ஸ்வாஹா
67 சாகலாண்டத்தில் பிரசண்டா
68 மகாந்தத்தில் சண்டிகை
69 ஸோமேச்வரத்தில்வராரோஹா
70 பிரபாதத்தில் புஷ்கராவதி
71 ஸரஸ்வதியில் தேவமாதா
72 மஹாலயத்தில் மஹாபாகா
73 பியோஷ்ணியில் பிங்களேச்வரி
74 கிருதசௌசத்தில் ஸிம்மிகா
75 கார்த்திகேயத்தில் யசஸ்கரீ
76 உத்பவாவர்த்தகத்தில் லோலா
77 சோணஸங்கமத்தில் ஸுபத்ரா
78 ஸித்தபுரத்தில் மாதா
79 பரதாச்ரமத்தில் லக்ஷ்மி
80 ஜாலந்தரத்தில் விச்வமுகீ
81 கிஷ்கிந்தையில் தாரா
82 தேவதாருவனத்தில் புஷ்டி
83 காச்மீரத்தில் மேதா
84 ஹிமாத்ரியில் பீமா
85 விச்வேச்வரத்தில் புஷ்டி
86 கபாலமோசநத்தில் சுத்தி
87 காயாவரோஹணத்தில் மாதா
88 சங்கோத்தாரத்தில் த்வநி
89 பிண்டாரகத்தில் திருதி
90 சந்த்ரபாகையில் காலா
91 அச்சோதத்தில் சிவகாருணீ
92 வேணுவில் அம்ருதா
93 பத்ரியில் ஊர்வசி
94 உத்தரகுருவில் ஓஷதி
95 குசத்வீபத்தில் யசோதகா
96 ஹேமகூடத்தில் மந்மதா
97. முகுடத்தில் ஸத்யவாதிநீ
98 அச்வத்தத்தில் வந்தநீயா
99 குபேரபுரியில் நிதி
100 வேதவதநத்தில் காயத்ரி
101 சிவஸன்னதியில் பார்வதி
102 தேவலோகத்தில் இந்த்ராணீ
103 ப்ரம்மாமுகத்தில் ஸரஸ்வதி
104 சூரியபிம்பத்தில் ப்ரபா
105 மாதாக்களில் வைஷ்ணவீ
106 ஸதிகளில் அருந்ததி
107 பெண்களில் திலோத்தமை
108 மனதில் பிரும்மகலா



# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகினறனர். அவர்கள் திருமலையில் தஙகுவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எணணிக்கை நாளுககு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும தற்போது உளள விருந்தினர் விடுதி, குடில்களின் மேல பொதுமக்களின் நன்கொடைத் திட்டத்தின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாணமை முடிவெடுத்துளளது. யாத்திரிகர்/பக்தாகளுக்குத் தொண்டு புரிந்திடும் ஓர் அறிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள அல்லது தனியாா நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நமபுகிறோம்.

## முதல தளம்.

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய காட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல்கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள், 872 முதல 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும. இவவொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன்கொடைத தொகை ரூ. 1. 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூனறு தளங்களைக்கொணட மூன்று விருநதினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர்களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ்அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள் :

இச்சததிரக்கட்டிடம் 9 தொகுதியினைக கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 943 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 1×12'4' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவ்அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரணடு தளங்களில் கட்டப்பட்டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டததினகீழ் ஒதுக்கப்படும். 4.20 மீ × 4.20 மீ பரப்பளவில் இவவறைத தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருநதினா விடுதிக கட்டிடத்திற்காகவோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற்கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இததங்கு வசதி கட்டிடஙகளுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம்/அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும் வழஙகலாம்.

## சலுகைகள்

நன்கொடையாளா அலலது அவர் உறவினர்கள் அலலது நிறுவனத்தின அல்லது அறக்கட்டளையைச் சார்நத உறுப்பினர்களோ அல்லது அவற்றின் அலுவலர்களோ வருடததில் 60 நாட்களுக்கு, (ஒரு முறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளிதத தங்கு வசதிகளில் தங்கலாம். அவாகள் நனகொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின, வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நனகொடையாளர்களின பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு:

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517507. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

தரும் பொருள் சிறியதே: பெறும் அருள் பெரிதே:



என்னை விதிக்கிற்றியே" (நாச்சியார் திருமொழி 1-3) என்பவை காண்க.

"வெங்கதிரோன குலததுக்கோர் விளக்காய" என்று ராமாவதாரத்தை குலசேகராழ்வாரும, "ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை" என்று கிருஷ்ணவதாரத்தை ஆணடாளுமம அருளிச்செய்தனர்.

இநத விளக்கு ஒருநாளும் அழியாதது என்பது பறறியும், ஜ்யோதி ஸ்வரூபமானது எனபது பறறியும் எம்பெருமானை "நந்தா விளக்கே" (பெரிய திருமொழி 3-8-1) என்றும் "நநதாவிளக்கின் சுடரே" (பெரிய திருமொழி 4-9-2) என்றும் திருமங்கையாழ்வார் அருளினார். சுடர் எனபதனல் சாதாரண விளக்கில் போல் திரியும், எண்ணெயும் புகையுமான அழுக்கு இன்றியே புகர் தான் ஒரு வடிவம் கொண்டதோ என்னும் படியான ஜ்ஞான ஸ்வரூபனைப் ப்ரகாதருளினன் என்ற கருத்தினல் திருமங்கை ஆழ்வார் எம்பெருமானை "விளக்கொளியை மரதகத்தை" என்று திருநெடுந்தாண்டகத்தில்(14) குறிப்பிடுகிறார். அப்பாசுரத்தில் மேலே திருத்தண்கா என்று வருவதால் அங்கு விளக்கொளி என்பது அத்தலத்துஎம்பெருமானகிய தீபப்ரகாசனைக் குறிக்கிறது என்று கொள்வதும் உசிதம். ஸ்வாமி தேசிகனும் அப்பெருமானின் மேல் அருளிய சரணகதி தீபிகையில் दीपस्दमेव என்ற ச்லோகத்தில் "உலகங்களுக்கு விளக்குநீயே, அதன் ஒளி உன் தேவியே நெடுங் காலமாயுள்ள அஞ்ஞான இருள் உங்கள் இருவராலேயே நீக்கக் கூடியது" என்று கூறியுள்ளார். लेनन्या हि मत्ता सीता भास्करेण प्रभा यथा என்றும் अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा என்றும ஸ்ரீமத் ராமாயணத்தில் ராமனும் ஸீதையும் தாங்கள் ஸூர்யனும அவனது ஒளியும் போல் பிரியாதவர்கள் பிரிக்கமுடியாதவர்கள்

# விளக்கொளி

திரு. லா. ஸ்ரீநிவாஸன - புதுதில்லி.

ஒளியினல் விளங்கும பொருள விளக்கு எனப்படும். அது போல் எம்பெருமான் ஸ்வயம் ப்ரகாசமான ஜஞானததை குணமாக உடையவனும், அப்படிப்பட்ட ஜஞானத்தையே ஸ்வரூபமாயுள்ளவனுயிருப்பது பற்றியும, தனனுடைய ஸவரூப ரூப குணஙகளைத் தானே பரகாசிப்பிகிறவன எனபது பறறியும் அவனை விளககு எனறே ஆழ்வார்கள பல விடங்களில் அருளிச் செய்வர். "வேடார் திருவேங்கடம் மேய விளக்கே" (பெரியதிருமொழி 4-7-5) "திருமூழிக்களத்து விளக்கே"(பெரிய திருமொழி 7-1-6), "அமரர்க்கு அருள் விளக்கினை" (பெரிய திருமொழி 10-1-4), "வித்தகன்வேங்கட வாணனென்னும விளககினில் புகசிப்பவன எனபது காணபிக்கப்பட்டதாகிறது. இங்கு "ஞானத்தின ஒளி உருவை" (பெரிய திருமொழி 2-6-3) "நன்மான வொணசுடரே" (பெரிய திருமொழி 7-2-3) 'ஞானச்சுடர்விளக்காய்" (திருவிருத்தம் 58) "மிக்க ஞான வெள்ளச் சுடர் விளக்காய்" (திருவாய்மொழி 2-6-2) எனபவைகளும் காணத்தக்கவை.

விளக்கின ஒளியானது எவவிதம் வெளிச்சத்தை உண்டாக்கி பதார்த்தங்களை விளங்கச் செய்கிறதோ அவ்விதமே தன்னுடைய ஸ்வரூபம், ஜீவனின் ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம ஆகிய அர்த்த பஞ்சகததையும் தமக்கு பகவான விளங்கச் செய் என்று கூறியுள்ளனர். ஆக விளக்கொளி என்ற திருநாமம் எம்பெருமான் பிராட்டி இருவரையும் குறிக்கும தனிப்பெருமை கொண்டது.

பெரியாழ்வார் (4-3-11) எம்பெருமானை "வேதாந்த விழுப்பொருளின் மேலிருநத விளககை" என்று விவரிததார். வேதங்களுள கூறப்படுகிற சிறநத அர்த்தங்களுள் மேற்பட்ட அர்த்தமாய் இருப்பவனும் தனக்குத்தானே விளங்குபவனுமான எம்பெருமானை என்றபடி.

உலகத்தில் காணும ஸாமாந்ய விளக்கைவிட இந்தவிளக்குக்கு நெடுவாசியுண்டு. எவ்விதமெனில், உலகத்தில் நாம் விளக்கைக காண வேறொரு விளக்கின் உதவியை நாட

வேண்டுவதில்லை. அதன் ஒளியைக் கொண்டே அதனைக் காண்கிறோம். ஆனால் எம்பெருமானாகிய நந்தா விளக்கைக்காண வேறொரு விளக்கின் உதவி இன்றியமையாதது. இதை "மின்திகழ்குடுமி வேங்கடமலைமேல் மேவிய வேத நல் விளக்கை" (பெரிய திருமொழி 4-3-8) என்று திருமங்கையாழ்வார் காட்டியருளினார். அதாவது ஒளிவிளங்கா நின்ற சிகரத்தையுடைய திருவேங்கடமலையின் மேல் பொருந்தியிருப்பவனும் வேதங்களால் காணக்கூடிய நல்ல விளக்கானவனும் என்றபடி. நம்மாழ்வாரும் இதை "மிக்க ஞானமூர்த்தியாய வேதவிளக்கினை" (திருவாய்மொழி 4-7-10) என்று அருளினார். மிகுந்த ஜ்ஞான ஸ்வரூபனாய், வேதமாகிய தீபத்தாலே காணப்படுபவனான எம்பெருமானை என்றபடி. "வேதமான விளக்காலே காணப்படுபவனை வேதப்ரகாசகனானவனை என்றுமாம்" என்று இங்கு ஈடு இதன் விவரணமாய் உள்ளது. "வேதநான்காய் விளக்கொளியாய்" என்ற திருநெடுந்தாண்டகம் முதல் பாசுரம் நான்கு வேதங்களையும் உபகரித்தவனாய், இருளையகற்றும் விளக்கொளி போல அஜ்ஞானாந்தகாரத்தைப் போக்கித் தன் ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பித்தவனாய் என்றபடி.

சாஸ்திர ஜ்ஞானத்தைக் கொண்டே எம்பெருமானை அறிய வேண்டும், அறிய முடியும் என்பதை "உய்த்துணர்வென்னும் ஒளிகொள் விளக்கேற்றிவைத்தவனை நாடி வலைப்படுத்தேன்" என்று பேயாழ்வார் (மூன்றாம் திருவந்தாதி 94) அருளினார். விவேக உணர்ச்சியாகிற உஜ்வலமான தீபத்தை ஏற்றி அவ்வெம்பெருமானைத் தேடிப்பிடித்து ஸ்வாதீனப்படுத்திக் கொண்டேன் என்றபடி. இருளிலே கிடக்கும் பொருளை விளக்கின் ஒளியைக் கொண்டு கண்டுபிடிப்பது போல், இந்த இருள் தருமா ஞாலத்தில் ஒருவராலும் கண்டு பிடிக்க முடியாத எம்பெருமானை ஜ்ஞானமாகிய சிறந்த விளக்கினை ஊஹாயத்தால் தேடிக்கண்டுபிடித்து நெஞ்சாகிய வலைக்குள்ளே இருத்திவிட்டேன் என்றபடி. "ஞானச் சுடர் விளக்கேற்றினேன்" என்று பூதத்தாழ்வாரும் அருளினார். திருமங்கையாழ்வாரும் "இளைப்பினை இயக்கம் நீக்கி ... விளக்கினை விதியில் காண்பார்" (திருக்குறுந்தாண்டகம் 18) என்று அருளினார். இதன் பொருள் க்லேசங்களினுடைய ஸஞ்சாரத்தைத் தவிர்த்து அளவிறந்த பஞ்சேந்திரியங்களைப் பட்டி மேயாதபடி தடை செய்து எம்பெருமான் விஷயத்திலே இடைவிடாத ஸ்ம்ருதி ஸந்ததி ரூபமான பக்தியை செய்து அந்த நிலைமையில் ஜ்வலித்துக் கொண்டு தோன்றுமளவிலே விளக்காகிய பகவானை சாஸ்திர விதிப்படியே காண வேண்டுமென்றிருக்கிற உபாஸகர்கள் உள்ளபடியே காண வல்லராவார் என்றபடி ஸ்வாமி தேசிகனும் சரணாகதி தீபிகையில் **योग्यं यमेश्र** என்ற ச்லோகத்தால் இதை அருளிச்செய்தார்.

விளக்கொளியின் ஸ்வபாவத்தையுடையதாகையாலே சாஸ்திர ஜ்ஞானத்தை விளக்கு என்கிறது. விளக்கானது இருளைப் போக்கி பொருள்களை விளங்கச் செய்வது போல் சாஸ்திரஜ்ஞானம் அகவிருளைப் போக்கி ஸ்வரூபத்தை ப்ரகாசிக்கச் செய்கிறது. அசேதனப் பொருள்கள் அழியக்கூடியவை, ஆத்மா அழியாதது என்ற உண்மையை அறிந்து கொள்வதற்காக சாஸ்திரங்களை எம்பெருமான் தந்தருளினான். இதைத் திருமங்கையாழ்வார் "கலைகளும் வேதமும்" என்ற பாசுரத்தில் காட்டியுள்ளார். இதன் பொருள் வேதத்தின் உபநிஷத் பாகமான வேதாந்தங்களையும், காமகாண்டமான வேதங்களையும் இதிஹாஸங்களையும், கல்பஸூத்ரங்களையும், வ்யாகரண சாஸ்திரங்களையும், மீமாம்ஸா சாஸ்திரத்தையும், அவரவர்க்குரிய ஸ்தானங்களையும் தேவர்களுக்கும் மற்றும் மனிதர்களுக்கும் க்ருபையால் அளித்தவர் பகவான் என்றபடி.

சாஸ்திரம் இருந்தால் மட்டும் போதாது. ஆதலால் இருள் நீங்கித் தெருள் பிறக்க சாஸ்திர ஜ்ஞானத்தை ஆசார்யன் மூலமாகவே அடையவேண்டும். அதற்கும் எம்பெருமானே அருள் புரிகிறான். **ईश्वरस्य च सौहार्दं** என்ற ச்லோகத்தொடரில் கூறியபடி ஜீவர்கள் நன்றாயிருக்க வேண்டுமென்று ஈச்வரன் எண்ணுவது, தற்செயலாக ஏற்படும் புண்ணியம், எம்பெருமானுடைய கடாக்ஷம், பகவானிடத்திலிருந்த த்வேஷம் விலகுவது, அவன் விஷயமாகச் சொல்வதைக் கேட்க விரும்புவது, ஸத்வகுணம் மேலிட்டவர்களுடன் பேசுவது ஆகிய இந்த ஆறும் ஒருவன் ஆசார்யனை அடைவதற்குக் காரணங்கள்.

பகவானே நமது ஆசார்ய பரம்பரையில் முதல் ஆசார்யனுமான். சரணாகதி தீபிகையில் **दीपावभास दयया** என்ற ச்லோகத்தில் இதை ஸ்வாமி தேசிகன் இவ்விதம் விளக்குகிறார். "விளக்கொளி எம்பெருமானே! கருணையால் இந்த ப்ரபஞ்சத்தை ப்ரமனை முதலாக வைத்து படைத்து, வேதங்களையும் உபதேசித்தவனாய், ஆசார்யர்களின் வரிசை முறையால் வழிபடத் தகுந்தவனாய், முதல்ஆசார்யனுமுள்ள உன்னை மோக்ஷத்தை விரும்புபவர்கள் சீடர்களாக ஆகி சரணமடைகின்றனர்".

மேலும் ஜயாக்ய ஸம்ஹிதையில் **साक्षान्नारायणो देव:** என்ற ச்லோகத்தில் கூறியபடி ஸ்ரீமந்நாராயணன் தானே தன் கருணையால் ஆசார்யனாகிய மனித உருவை எடுத்துக் கொண்டு சாஸ்திரங்களாகிய கைகளாலே ஸம்ஸாரக்கடலில் மூழ்கியிருக்கும் உலகங்களைக் கைத்தூக்கிவிடுகிறான். இதை அநுஸரித்தே ஸ்ரீபராசர பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் **हर्तुं तम:** என்ற ச்லோகத்தில் இவ்விதம் அருளியுள்ளார். "அருளாளனான எம்பெருமான் அஜ்ஞானமாகிய இருளை நீக்கிக்கொள்ளவும் உள்ளது இல்லது

என்னும்படியான நன்மை தீமைகளை ஆராய்ந்து உணர்வதற்கும் திருவிளக்குப் போன்ற சாஸ்திர ப்ரமாணத்தைக் கொடுத்திருக்கிறான். பாக்யசாலிகள் அத்திருவிளக்கைக் கொண்டு எம்பெருமானைக் கண்டறிந்து அநுபவிக்கப் பெறுகிறார்கள். சில அவிவேகிகளோ என்றால் அத்திரு விளக்கிலேயே விட்டில் பூச்சிகள் போல விழுந்து மடிகின்றனர்". விளக்கு இல்லாவிடில் இன்னவிடத்தில் இன்னது இருக்கிறது, இன்னது இல்லை என்று அறிய முடியாது. அது போல் சாஸ்திரமும் இது நன்று இது தீது என்று நன்கு உணர்வதற்கு உறுப்பாகும்.

தயாசதகத்தில் अनुगुणदशार्पितेन என்ற ச்லோகத்தில் ஸ்வாமி தேசிகனும் இதே போல் பின்வருமாறு அருள்கிறார். "உலகத்தை உண்டு பண்ணின பிறகு ஸ்ரீநிவாஸனுடைய தயையானவள் அஜ்ஞானமான இருளை அகற்ற ஜனங்களுக்குக் கேவலதர்க்கத்தால் அணுக்க முடியாத ஸ்திரமான சாஸ்திர தீபத்தை அளிக்கிறாள். அது தக்க திரியில் ஏற்றப்பட்டுள்ளது. (உரிய ஸத்வகுணம் தலையெடுத்த நிலையில் கொடுக்கப்படுகிறது.) தயையின் அன்பு என்னும் எண்ணெய் இடப்பட்டதாயுள்ளது. குழந்தை பிறந்ததும் ப்ரஸூதி க்ருஹத்தில் இருளையகற்ற விளக்கேற்றிவைப்பதை ஒத்ததாம் இது.

கண்ணனும் கீதையில் तेषामेवानुकम्पार्थं என்ற ச்லோகத்தில் "பக்தி நிஷ்டர்களை அநுக்ரஹிப்பதற்காகவே நான் அவர்களுடைய மனோபாவத்தில் தோன்றி, கல்யாண குணங்களையும் ப்ரகாசப்படுத்திக் கொண்டு, தெளிவான ஜ்ஞானமாகிய விளக்கையேற்றி ஜ்ஞானத்துக்குத் தடங்கலான பராசீன பாபங்களால் ஏற்பட்டிருக்கும் மற்ற விஷயங்களிலுள்ள ஈடுபாட்டை அழிக்கிறேன்" என்று அருளியுள்ளான்.

அந்த சாஸ்திரமான விளக்கும் எம்பெருமானேயாகும் என்பதைத் திருமங்கைமன்னன் "மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை" என்று காட்டியருளினார். अकारो वै सर्वावाक् 'எல்லா வாக்குகளும் அகாரமே' என்கையாலே, அகாரமே நான்மறைகளாக விரிந்தன. எம்பெருமான் அகாரவாச்யனாகையாலே அவனே மறையாய் விரிந்தான் என்பது பெறப்படும். இப்பொருளையும் दीपं என்னாமல் प्रदीपं என்னும் சொல்லால் பட்டரும் தேசிகனும் காட்டினர். प्रदीपं என்பது தீபத்தினின்றும் உண்டானது என்றபடி, தீபத்தைக் காட்டிலும் விரிந்தது அதிக ப்ரகாசமுடையது.

பொய்கையாழ்வார் "வையந்தகளியா" என்றும், பூதத்தார் "அன்பே தகளியா" என்றும் இரண்டு விளக்குகளை ஏற்றினர். தகளியாவது நெய்க்கும் திரிக்கும் ஆதாரமாயிருக்கும் அகல்.

"வையந்தகளியா" என்ற பாசுரத்தின் பொருளாவது, பூமி அகலாகவும், அந்த பூமியைச் சுற்றியுள்ள கடலே நெய்யாகவும், உஷ்ணமான கிரணங்களையுடைய ஸூர்யன் விளக்காகவும், செஞ்சுடர்ச் சக்கரக்கையனை எம்பெருமானது திருவடிகளில் இப்பாமாலையாகிய பூமாலையை சாத்தினேன். எதற்காகவென்றால் பகவத்கைங்கர்யத்திற்கு இடையூறாக உள்ள துன்பக்கடல் நீங்குகைக்காக!

பூமி கடினமான வஸ்துவாயிருப்பதால் அதைத் தகளியாகவும், கடல் த்ரவ்ய வஸ்துவாகையால் அதை நெய்யாகவும், ஸூர்யன் ப்ரகாச ஸ்வரூபனாகையால் அவனை விளக்காகவும் ரூபித்து அருளியுள்ளார். இவ்விதம் ரூபணம் செய்வதன் கருத்து யாதெனில், சூன்யமே தத்வமென்றும், உலகம் ஒரு ஈச்வரனை உடையதல்ல என்றும் கூறும் மதங்களை நிரஸித்து இந்த விசித்ரமான உலகை நிர்மிக்க ஜ்ஞானசக்தி முதலிய குணங்களையுடைய திவ்யமங்களவிக்ரஹத்தோடு கூடின ஸர்வேச்வரன் உளன், அவனுக்கு அடிமை செய்வதே புருஷார்த்தம் என்று விளக்குவதாம்.

मेघोदय : सागरसन्निकृत्ति : என்ற ச்லோகத்தில் கூறியபடியே மேகம் தோன்றுவது, ஸமுத்ரம் அலைபொங்கித் திரும்புவது, மின்னல் தோன்றி மறைவது, காற்று அசைவது, சந்திரனின் வ்ருத்தி க்ஷயபிரிவுகள், ஸூர்யன் செல்வது ஆகிய இவையெல்லாம் விஷ்ணுவின் விசித்ரமான மாயைகள். ஸூர்யன் தவறாமல் உதிப்பதும் அஸ்தமிப்பதும், கடல் எல்லையை மீறாமலிருப்பதும், இதுபோன்று மற்றும் அனேக விஷயங்கள் அபாரசக்தியுடன் கூடிய ஒரு ஜகத்காரண பூதன் உளன், அவன் ஆஜ்ஞைக்கு உட்பட்டே ஸகலமும் நடக்கிறது. ஆகவே அவனுக்கு அடிமைபூணுதலே புருஷார்த்தம் என்பதை வற்புறுத்தும். இங்கு ஆழ்வார் அநுமானத்தைக் கொண்டு எம்பெருமான் உண்டு என்று ஸாதிப்பதாகத் தோன்றினாலும், அது வேதத்துக்கு விருத்தமான அநுமானமன்றாகையால் தவறல்ல.

கடைசியடியான "இடராழி நீங்குகவேயென்று" என்பதற்கு மூன்று படியாகப் பொருள் உரைக்கலாம். இதுவரையில் எம்பெருமானைத் துதிக்காமலிருந்ததால் உண்டான வருத்தம் நீங்குவதற்காக என்றும், துதிக்கவொட்டாமல் தடுக்கும் பாவங்கள் தொலைவதற்காக என்றும், இப்பிரபந்தத்தைக் கற்று ஸம்ஸாரிகளும் துயர் தீர்ந்து வாழ்வதற்காக என்றும் கொள்வது.

இனி "அன்பே தகளியா" என்ற பூதத்தாரின் பாசுரத்தைக் கவனிப்போம். இதன் பொருள். அறிவையளிக்கும் தமிழ்நூலை இயற்றிய அடியேன் பக்தியே அகலாகவும், பரபக்தியே நெய்யாகவும், இனிமையாலே உருகும் மனம் அகலில் இடப்படும் திரியாகவும், ஜ்ஞான ஸ்வரூபமான ஆத்மா கரையப்பெற்று பரஜ்ஞானமாகிற கிளர்ந்தெரியும் விளக்கை நாராயணனுக்கு ஏற்றினேன் என்றபடி.

பரம புருஷனுடைய அருளாலே உணடான தம் அன்பின் நிலைகளைத தகளியும் நெயயுமாக உருவகபபடுத திக்கொணடு, அனைவர்க்குப் தலைவனான நாராயணனுக்கு பரஜ்ஞானமாகிற கொழுநதுவிட்டெரியும் விளக்கை ஏற்றி அடிமை செயயப் பெற்றேன் என்று அருளினாராயிறறு.

பரமபக்தியின் ஆரமப நிலையாய், பகவத்விஷயத்தின் பெருமையைக கண்டதே காரணமாகி உணடாகி வளர்வதான பக்திஎனப்படும் அன்பே இவர் ஏற்றிய விளக்குக்கு அகல். அகலை ஆதாரமாகக் கொணட நெய்யைப் போலே, பக்தியை ஆதாரமாகக் கொண்டு முற்றிய நிலையான பரபக்தி நெய்யாயிறறு. மேலே ஏறப் போகிற பரஜ்ஞானமாகிற விளககுக் காரணமாய் அதை வளர்க்கும நெய்யாகிறது பரபக்தி. பகவத்விஷயத்தின் பெருமையை அநுஸநதிபபதால ஏறபடும ஆனந்தத்தாலே உருகி நனைந்திருககிற மனம் பரஜ்ஞானமாகிற விளக்குக்கு இடப்படும திரியாகிறது. விளக்குக்கு நேரே ஆதாரமாயிருக்கும் திரிபோலே, இமமனமும் பரஜ்ஞானமாகிற பக்திநிலைக்கு ஆதாரமாயிருக்கிறது என்றபடி.

மூன்று ராமாநுஜ தீபஙகள :

ஆழ்வார்கள் ஏற்றிய இரணடு தீபஙகளுக்குப் பிறகு இப்போது மூன்று ராமாநுஜ தீபஙகளைக காண போம ராமாநுஜன எனறால் (1) ராமனின தம்பி பரதன், (2) பலராமனின் தம்பி க்ருஷ்ணன் (3) பாஷ்யககாரர் எனற ராமாநுஜன ஆகிய மூவரையும குறிககும. இவர்களில் முதல இருவரும் தீபங்களை ஏற்றினர். பாஷ்யகாரர் ஓர் தீபமாகவே அவதரித்தார்.

பாதுகாஸஹஸ்ரத்தில் ஸவாமி தேசிகன **स्नेहेदेवि भवती** என்ற ச்லோகத்தில் இவ்விதம அருள்கிறார். ராமனை ஸூர்யன் அயோத்தியிலிருந்து மறைந்ததும் எங்கும் இருள் மூடியது. அபபோது பரதன பாதுகை என்னும விளககை ஏற்றி தனது பகதி என்னும எணணெயால நிரப்பி அதை ப்ரகாசமாகுமபடி செய்து சூழ்ந்திருநத இருளைப் போக்கடித்தான் என்றபடி. இஙகு பாதுகையை தீபரேகை எனபதனால் அதனின்றும் வெளிவரும வெளிச்சம சிறிதாக இருநதது. அதை பரதன தனது பக்தியாகிய எண்ணெயையிட்டுப் பெரிதாகச் செய்தான. அதனால அது நன்கு ப்ரகாசித்தது என்று காட்டியபடி. அதாவது பாதுகையின் பரபாவம் அதற்கு முன நன்கு அறியப்படவில்லை. பரதனால் அபிஷேகம செயயப்பட்ட பிறகே நனறாக எல்லோராலும் அறியப்பட்டது என றபடி. ஆக, பரதனாகிய ராமாநுஜன் ஏறறிய விளக்கு இது.

தயாசதகத்தில் **प्रभूतविबुधद्विषद** என்ற ச்லோகத்தில் இராமாநுஜனான கணணன் ஏற்றின விளக்கை ஸ்வாமி தேசிகன இவ்விதம் விளக்குகிறார். எதையும் தாங்கக கூடிய பூமிககும் அஸுரர்களின மூலம் தாஙக முடியாத பாரம ஏற்பட்டபோது அவ்வஸுரர்களைத் தொலைப்பது எனற வயாஜத்தால் தயாதேவி ஸ்ரீ நிவாஸனை க்ருஷ்ணனாய் அவதரிக்கச செய்தாள. அதன உணமைக் காரணமோ வெனறால் உலகின அஜ்ஞான இருளைப் போக்க கீதையை பரவர்ததிப்ப தேயாம். வேதமான உனனத மாளிகையில் கீதை மஙகள தீபமாக ப்ரகாசித்துக் கொணடு அதன் மூலைமுடுக்குகளிலுள்ள இருட்டையெல்லாம போககடிக்கிறது. அதாவது வேதத்தின் உணமைப பொருளகளை யாவரும அறியுமபடி விளககுகிறது எனறபடி.

மூன்றாவதாக பாஷ்யகாரரை ஒரு விளக்காக **निरालोके लोके** என்ற யதிராஜஸப்ததிச்லோகத்தில்ஸவாமி தேசிகன நிருபிக்கிறார், அதன பொருள். இவ்வுலகில உணமையறிவின் ஒளிவீசவில்லை. மக்கள் தத்துவங்களை அறியாமல் அஜ்ஞான இருளில் மூழ்கிக கிடந்தனர் அதைப போககப் பாஷ்யககாரர் என்ற விளக்கு ஏறபட்டது. வேறு பயனை நாடுவது எனனும கசடற்ற பகவத பக்தியான எண்ணெய் நிறைந்தது அநத தீபம. அந்த தீபம் அவதரித்து ப்ரகாசிக்க வில்லையேயாயின் நற்குணமுள்ள ஸாதுககள் கூடப் போதிய அறிவு பெருமையால் துர்புததிகள கற்பித்த பிறமதமெனனும பாதாளகுகையில வீழ்நது கிடநது உழலவேணடியிருந்திருககும். பிறமதத்தின் அஹங்கார மென்னும் இருள அந்த பாதாளத தில் சூழ்நது நிற்கும். அவர்கள் பேசும குயுகதிகள் அந்தக் குகையில் வாழும துஷ்ட ஜந்துககள். ஸாதுகள் அந்தக்கொடிய விலங்குகள் நடுவே அகப்பட்டு வெளியே வரமுடியாமல் கிடகக நேரிட்டிருக்கும ஸ்ரீ பாஷ்யககாரர் எனனும் தீபம தோனறி உணமைப் பொருள்களை விளக்கிக் காட்டிப் பிறமதத்திலுள்ள குற்றங்களை எடுத்துககூறி அறிவுச சுடரை வீசச் செய்ததால் அறிஞர்கள் பிற மதத்தில அகப்படாது நல் வழி பெற்றனர். எம்பெருமானார் குனறிலிட்ட விளககு போல் இருநதார். இருள் சூழ்நத சுற்றுப்புறஙகளையுடைய மலையின் மீது சுத்தமாய உயர்ந்த எணணெயை நிறைய வார்தது தீபத்தை ஏற்றி வைததால இடப்பரப்பு முழுவதும் பிரகாசம பரவும். தீபம இல்லாவிடில் எஙகும இருள் கவிந்த நிலையில் துஷ்டப் பிராணிகளிடம் மனிதர் அகப்படவும், பெரும பள்ளத்தில் விழவும் இடமாகும் என்றும் இங்குக்காட்டினபடி. சலோகத்தில் **परस्वेह** எனற சொலலுக்கு (1) பகவத் பக்தி (2) பிறரிடம் அன்பு (3) உயர்ந்த பக்தி என்ற மூனறு பொருளகளும் பொருந்தும.

விளககாக நிரூபிக்கபபட்ட எம பெருமானார் வேதாந்த தீபம என்ற க்ரநததைதயும் அநுக்ரஹித்துள்ளார். ஸவாமிதேசிகனும் தீப ப்ரகாசன் மேல் அருளிய சரணாகதி தீபிகையை ஒரு விளக்காக **स्नेहोपन्न** என்ற ச்லோகத்தில் உருவாக்கினர். ★



# ஸ்ரீசௌடேஸ்வரி அவதாரம்

புராணம் என்ற சொல்லுக்குப் 'பழைய வரலாறு' என்பது பொருள். காலம் குறிப்பிட்டுச் சொல்ல முடிகின்ற இன்றைய சரித்திரத்தைப் போல அல்லாமல், காலம் கணித்துச் சொல்ல முடியாத தொன்மை மிக்க செய்திகளைத் தருவது புராணம் ஆகும. கடவுளரின பெருமைகளை எடுத்துச் சொல்லும முறையில் புராணங்கள் அமைந்திருநதாலும், சிறந்த தததுவங்களை மககளுக்கு உணர்த்துவதற்காகவே இவை தோன்றியிருக்கின்றன.

புலவர். P. கிருஷ்ணராஜன்,
M.A., B.Ed.,
சேலம்.

புராணங்களில் புனைந்துரைகள் மிகுதியாக இருக்கின்றன் என்பது சிலர் கருத்து. உண்பதற்காக மாம்பழம் வாங்குகிறோம்; மேலே இருக்கும் சதைப்பகுதியை உண்கிறோம். உள்ளே இருக்கும் கொட்டையை எறிந்துவிடுகிறோம். வாழைப்பழத்தை உண்ணும்போது, மேலே உள்ள தோலை எறிந்துவிடுகிறோம். உள்ளே இருக்கும கனிப் பகுதியை உண்கிறோம். பலாப்பழத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? சுளைகளையும் கொட்டைகளையும் எடுத்துக் கொண்டு மேல்தோல், சடைபோன்ற நார்ப்பகுதி முதலியவற்றைத தள்ளிவிடுகிறோம். இவ்வாறே புராணங்களிலும், நமக்கு நன்மை சேர்க்கின்ற உண்மைகளை மட்டுமே எடுத்துக கொள்ள வேண்டும. அனனப்பறவை பாலைப்பருகும்போது அதிலுள்ள நரை விட்டுவிட்டுப் பாலை மட்டுமே உண்ணுமாம். அதுபோலவே, புராணங்களிலிருந்து மக்களுக்கு நல்வழி காட்டும் செய்திகளை எடுத்து உய்வதே அறிவுடையோரின் கடமை ஆகும்.

புராதனம் என்ற சொல்லிலிருந்துதான் புராணம் என்ற பெயர் பிறந்தது என்று கூறுகிறார்கள். வடமொழியில்தான் முதன் முதலில் புராணங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவற்றை எழுதியவர் வியாச முனிவர். இவர் எழுதியுள்ள புராணங்கள் பதினெட்டு. அவை 1. பிரம்ம புராணம் 2. பதுமபுராணம் 3. விஷ்ணு புராணம் 4. சைவ புராணம் 5. பாகவத புராணம் 6. பவிஷ்ய புராணம் 7. நாரதீய புராணம் 8. மார்க்கண்டேய புராணம் 9. ஆக்நேய புராணம் 10. பிரம்ம வைவர்த்த புராணம் 11. இலிங்க புராணம் 12. வராக புராணம் 13. காந்த புராணம் 14. வாமன புராணம் 15. மச்ச புராணம் 16. கூர்ம புராணம் 17. காருட புராணம் 18. பிரமாண்ட புராணம என்பன ஆகும்.

மக்களின் மானத்தைக் காத்து அவர்களுக்கு அழகைத் தருவது ஆடை. இத்தகைய ஆடைகளை நெய்து தரும் நெசவுக் கலைஞனின் பெருமையையும், அவனுக்குக் கடவுளர் துணையாக இருந்ததையும் கூறுவது பிரமாண்ட புராணம். பிரமாணட புராணத்தின் உத்தர காண்டததில் பிரம்மன்—நாரதர் உரையாடற்பகுதி ஒன்று காணப்படுகிறது. இது தேவாங்கபுராணம் எனப்படுகிறது. முதன்முதலில் நெசவுத்தொழிலைச்செய்து ஆடை வழங்கிய தேவல முனிவரின வரலாற்றை இது தெரிவிக்கிறது. இவர்தான் முதல் தேவாங்கன ஆவார். தேவல முனிவர் மேற்கொண்ட நெசவுத தொழில் செழித்து வளரவும், அவர் வழியில் தேவாங்க மக்கள் தோன்றி ஒரு குலமாக வாழவும அருள் வழங்கிக் காத்து ரட்சிக்

கும் தெய்வம ஸ்ரீ சௌடேஸ்வரி அம்மன்.

பிரம்மதேவன உலகத்தைப படைத்தபோது, மனிதர்களுக்கு ஆடைகளை வழங்க மனு என்னும் மானிடனைப் படைத்தார். மனு, பல வித ஆடைகளை நெய்து அனைவருக்கும் உதவினார். தவநெறி நினறு சிவ நெறி பேணிய அப்புண்ணிய சீலரை, அவரது இறுதிக் காலத்தில் உமா மகேசுவரர் தமமோடு இரண்டறச் சேர்த்துக கொண்டார். அவருக்குப பிறகு, ஆடைகளை நெய்து அளிப்பதறகு யாரும் இல்லை. அதனால் சிவபெருமான் மீண்டும் மனுவை வெளிப்படுத்த எண்ணினார். தம்முள் கலநதிருக்கும அவரைத் தமது இதயத்திலிருநது வெளிப்படுத்தினார். மனு இப்போது தேவல முனிவராகத் தோன்றினார்.

கயிலைமூர்த்தி தேவல முனிவரை நோக்கி, "நீ பரத கண்டத்தில் சகர நாட்டின் தலைநகரமாகிய ஆமோத நகரம் சென்று அரசு செய்வாயாக. அதற்குமுன் திருப்பாற்கடலை அடைந்து திருமாலிடம் உந்தித் தாமரை நூலைப் பெறுக. அந்த நூலைக் கொண்டு ஆடைகள் நெய்து அனைவருக்கும் வழங்குக. நீ மண்ணுலகில் ஏழு பிறப்புக்கள் எடுத்து, அதன் பிறகு என்னிடம் இரண்டறக் கலப்பாயாக" என அருள்புரிந்தார். அப்போது மகேஸ்வரரோடு உடனிருந்த பார்வதிதேவி, "மகனே! நீ நினைக்கும்போதெல்லாம நான் வந்து உனக்கு உதவி செய்வேன்" என்று வரம் தந்தாள்.

தேவல முனிவர் திருமாலைக் கண்டு அவரது உந்தித் தாமரை நூலைப் பெற்றுக கொணடு மண்ணுலகம் அடைந்தார். அங்கே அரககர்கள் சிலர், தேவல முனிவரிடமிருநத நூலை வஞ்சகமாகக் கைப்பற்ற முயன்றார்கள். அவர்கள பலவகை ஆயுதங்களோடு தேவலரை எதிர்த்தார்கள். ஆடை நெயவதற்கு மூலாதாரமான திருமாலின் உந்தித்தாமரை நூலுக்கு ஆபத்து வநதுவிட்டதே எனறு தேவல முனிவர் கவலைப்பட்டார். நிராயுத பாணியாக நின்ற அவரை, அரக்கர் கூட்டம் கீழேசாய்ந்தது. தீய அரக்கர்களைக கொனறு தம்மைக் காப்பாற்றுமாறு தேவல முனிவர் பராசக்தியைத் துதித்தார். பக்தனின் வேண்டுகோளை ஏற்ற பராசகதி சிங்க வாகனத்தின் மீது தோனறினாள்.

அப்போது தேவியின் கணகள் சிவந்தன. அம்மனின் நான்கு திருக்கரங்களிலும் சூலம், சக்கரம், தண்டாயுதம், வாள் எனனும் ஆயுதங்கள் ஒளி செய்தன அம்மனது முடியின் மேல் இருநத கிரீடம் கோடி சூரியர்களைப்போலப் பேரொளி வீசியது. அநதப் பேரொளி அரக்கர்களின் கண்களை மயக்கியது. அப்போது தேவி அவர்களுடன் கடுமையாகப் போரிட்டாள். அரக்கர் பலர் மடிந்தனர் இறந்த அரக்கர்கள் சிந்திய இரத்தத் துளிகளிலிருந்து புதிய புதிய அரக்கர்கள் தோன்றிப் போரிட்டார்கள். தேவியின் வாகனமாகிய சிங்கம் அதனைக் கண்டது. அரக்கர்களின் இரத்தம் நிலத்தில் விழாதவாறு அது குடித்தது. இறுதியில் அரக்கர் தலைவர் ஐவர் மட்டும் உயிரோடு இருந்தனர். தேவி தனது சூலத்தால் அவர்களை அழித்தாள்.

தேவலர் முன் தோன்றி அரக்கர்களை அழித்த தேவியின் கிரீடம் பேரொளி வீசித் திகழ்ந்தது. அந்தக் கிரீடத்தின் ஒளிப் பெருமையால் தேவிக்குச் சூடாம்பிகை, சூடநாயகி, சூடேஸ்வரி என்னும் திருப்பெயர்கள் உண்டாயின. பின்னர் இவை சௌடாம்பிகை, சௌடநாயகி, சௌடேஸ்வரி என மாறின. சூட எனற சொல்லுக்குக் 'கிரீடம்' என்பது பொருள்.

அரக்கர்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றிய சௌடேஸ்வரி அம்மனைத் தேவலர் பலவாறு போற்றி வணங்கினார். அம்மன் தேவலரிடம், "மகனே! இனி நீ தடையில்லாமல்

ஆடைகளை நெய்யலாம். இன்று அமாவாசை நாள். இந்த அமாவாசை இரவில் அரக்கர்களிடமிருந்து உன்னைக் காப்பதற்காக, நான் சௌடேஸ்வரி அவதாரம் எடுத்தேன். என்னால் இன்று நீயும் உயிர் பிழைத்தாய். எனவே இந்த அமாவாசை நாளே எனக்கும் உனக்கும் பிறந்த நாளாகும்.

"ஆகையால் இனி எஞ் ஞான்றும்
அனைய நாள வரின் அன்றெல்லாம
ஓகையால் எனைத்தி யானித்து
உறைதி நீ! உறைந்தா யாகில்
வாகை சேர் திறலும் சீரும வளர்
தரு குலமும் வாழ்வும்
சோகமா றியபோ இன்பத் துணிவு
முண் டாகும அனறே!"
(தேவாங்க புராணம்)

இன்று முதல் நீயும் உன சந்ததியினரும் ஒவ்வொரு அமாவாசை நாளிலும் நெய்யும் தொழிலைவிட்டு என்னைத் தியானித்து ஓய்வு கொள்வீர்களாக. இவ்வாறு செய்து வந்தால் சீரும் சிறப்பும், வாழ்வும் வளமும் பெருகி எல்லா நன்மைகளும உண்டாகும்" என்று கூறி மறைந்தாள்.

தேவலர் ஆமோத நகரை அடைந்தார். அப்போது அந்நகரின் அரசனாக இருந்தவன் சுனபன. தேவலரது வருகையைச் சிவபெருமான் அவ்வரசனுக்கு ஏற்கனவே உணர்த்தியிருந்தார் சுனபன் தேவலரை வரவேற்று, அவரை ஆமோத நகரின் அரசனாக முடி சூட்டினான். ஆட்சியை நன்கு கவனித்து வந்த தேவலர், ஒரு நல்ல நாளில் அரணமனையின் ஒரு புறத்தில் தறியைப் பூட்டினார். திருமால் அளித்த உந்தித் தாமரை நூலை அத்தறியில் பிணைத்து ஆடை நெய்யத் தொடங்கினார். அதற்கு முன், முன்பு அரக்கர்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றிய சௌடேஸ்வரி அம்மனை நினைத்து வணங்கினார். தேவலரின் நன்றிமறவாப் பண்பைக் கண்டு அம்மன் அவருக்குக் காட்சி கொடுத்தாள்.

சௌடேஸ்வரிதேவி ஒரு பொன் கங்கணத்தைத் தேவலரது வலக்கரத்தில் அணிவித்தாள். அதைக் கையிலணிந்து கொண்டு நெசவுத் தொழில் செய்தால் நெசவுக்கலை வளரும், செல்வம் கொழிக்கும் என்று கூறி மறைந்தாள். தேவலரும் அம்மன் தந்த கங்கணத்தைப் போற்றி நெய்யத் தொடங்கினார். நேத்திர பந்தாவளி, பட்ட பந்தாவளி, அன்ன பந்தாவளி, அமிர்த சந்திர பந்தர், அன்ன பூஜாவளி, சந்திராவளி, தாராவளி, சந்திரதாராவளி, மேகாவளி போன்ற பலவகை ஆடைகள் தேவலரால் நெய்யப்பட்டன. தேவலர் அந்த ஆடைகளை மக்கள் தேவர் ஆகிய அனைவருக்கும் வழங்கினார்.

தேவல முனிவர் நெய்து கொடுத்த ஆடைகள் தேவர்களின் அங்கங்களை அலங்கரித்ததால் அவருக்குத் தேவாங்கன் என்னும் பெயர் ஏற்பட்டது என்றும், சிவபெருமானாகிய மகாதேவனின அங்கமாகிய இதயத்திலிருந்து தோனறியமையால் அவருக்குத் தேவாங்கன எனனும பெயர் ஏற்பட்டது என்றும் சொல்லப்படுகிறது. தேவாங்கம் என்பது பட்டுப்பீதாம்பரம் சேலைகளைக் குறிககுமென்றும், அவ்வகை ஆடைகளை நெய்தவர்கள் தேவாங்கர்கள் என்றும் தமிழ் நூல்களில் காணப்படுகின்றன.

தேவலர் மனையறம் ஏற்று நனமக்கள் பலரைப் பெற்றார். இறுதியில் தம்முடலை இலிங்க வடிவமாக்கி மறைந்தார். அதனபின் வித்யாதரன், புஷ்பதந்தன, வேதாளன், வரமினி, தேவசாலி, தேவதாஸ் என்னும் ஆறு பிறப்புக்களை எடுத்தார். மக்கட் செல்வமும் வளர்ந்தது.

தேவலரை முதன்மையாகக் கொண்டுதோன்றிய வம்சம் தேவாங்க குலம் எனப்படுகிறது. தம் குல முதல்வனாகிய தேவலரைக் காப்பாற்றித் தேவாங்கஇனம் தழைக்கச்செய்த ஸ்ரீசௌடேஸ்வரி அம்மனைத் தேவாங்கர்கள் குலதேவதையாக இன்றும் வழிபட்டு வருகிறார்கள்.

தேவாங்கர்கள் ஆதியில் வாழ்ந்த ஊர் ஆமோத நகரம். இது காசிக்கு அருகிலுள்ள ஓர் ஊர் என்று கருதப்படுகிறது. சிலர், ஆந்திர மாநிலத்தில் உள்ள ஐதராபாத் என்னும் நகரமே ஆமோத நகரம் என்று கூறுகின்றனர். வேறு சிலர், தற்போது மகாராஷ்டிர மாநிலத்தில் உள்ள அகமது நகரமே பழைய ஆமோதநகரம் என்று சொல்லுகிறார்கள் இந்தியநாட்டில். தேவாங்கர்கள் நேபாளம் முதல் கன்னியாகுமரி வரை பரவி வாழ்கிறார்கள். அவரவர் வாழும் இடத்தைத் தாயகமாகக் கொண்டு கன்னடம், தெலுங்கு, மராட்டி முதலிய பல மொழிகளைத் தேவாங்கர்கள் பேசுகிறார்கள். மொழி வேறுபட்டாலும் இவர்கள் அனைவரும் ஸ்ரீ சௌடேஸ்வரி அம்மனையே குல தெய்வமாகக் கொண்டிருக்கிறார்கள். தேவாங்கர்கள் குடியிருக்கும் எல்லா ஊர்களிலும் ஸ்ரீசௌடேஸ்வரி அம்மனுக்குக் கோவில் அமைக்கப்பட்டுள்ளது.

தேவலரின் ஏழாவது அவதாரமான தேவதாஸனதான முதன் முதலில் சௌடேஸ்வரி அம்மனுக்குக் கோவில் அமைததவன். இவன் அம்மனைக் கோவிலில் எழுந்தருளச் செய்தது குறித்து செவிவழிச்செய்திஒன்றுஉள்ளது. இவன் ஸ்ரீசைலம என்னும் ஸ்தலத்தில் சிவராத்திரி விழாவின்போது தானே நெய்த ஆடை ஒன்றைக் கோவில் கொடிமரத்திற்கு அணிவித்து வணங்கினான். கோவிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனான மல்லிகார்ஜுன சுவாமி மகிழ்ச்சி அடைந்து இவனுக்குக்காட்சியளித்து வேண்டும் வரம் கேட்குமாறு கூறினார். தேவதாஸன் தான் ஓர் ஆலயம் கட்ட எண்ணியிருப்பதாகவும், அக் கோவிலில் தனது குல முதல்வராகிய தேவலரை அரக்கர்களிடமிருந்து காப்

பாற்றித் தேவாங்க குலத்தை வாழ் வித்த ஸ்ரீ சௌடேஸ்வரி அம்மனோடு இறைவனும் எழுந்தருள வேண்டும் என்றும் பணிந்தான். இறைவன் அதற்கு இசைந்து, கோவில் கட்டி முடித்தபின் ஊருக்குப் புறத்தே ஓர் இடத்தைப் புனிதப்படுத்தினால், அங்குச் சௌடேஸ்வரி அம்மன் தோன்றுவாள் என்றும், அங்கிருந்து அம்மனைக் கோவிலுக்கு அழைத்துச் செல்லும்படியும், கோவிலுக்கு அம்மன் வந்ததும் தாம் அங்கு எழுந்தருளுவதாகவும் கூறினார்.

தேவதாஸன் ஆமோதநகரம் வந்து அழகிய கோவில் ஒன்றைக் கட்டி முடித்தான். பெருமான் கூறியவாறே ஊருக்குப் புறத்தே ஓரிடத்தைப் புனிதப்படுத்தி, அம்மன் எழுந்தருள வேண்டுமென்று தன் குல மக்களுடன் துதித்தான். சௌடேஸ்வரி அம்மன் அங்கே தோன்றினாள். தேவதாஸனும் மக்களும் முன்னே செல்ல வேண்டுமென்றும், தான் அவர்களைப் பின்தொடர்ந்து வருவதாகவும் கூறினாள். முன்னே செல்பவர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் தன்னைத் திரும்பிப் பார்க்கக் கூடாதென்றும், திரும்பிப் பார்த்துவிட்டால் தான் அங்கேயே தங்கிவிடப் போவதாகவும் அம்மன் தெரிவித்தாள். எல்லாரும் அதற்கு ஒப்புக் கொண்டனர்.

அனைவரும் கோயிலை நோக்கி நடந்தார்கள். அம்மன் தனது பாதச் சலங்கைகள் ஒலிக்கப் பெருமிதத்துடன் நடந்து சென்றாள். சலங்கைகளின் ஒலி கேட்டு, அம்மன் தங்களுக்குப் பின்னால் வருவதாக எண்ணி அவர்கள் முன்னேகிச் சென்றுகொண்டிருந்தார்கள். வழியில் சிறிய ஆறு ஒன்று குறுக்கிட்டது. ஆற்றுப் படுகை நீரில் நடந்து வரும்போது அம்மனின் சலங்கைஒலி கேட்கவில்லை. அம்மன் தங்களைப் பின்தொடரவில்லையோ என்ற ஐயம் அவர்களுக்கு உண்டாயிற்று. அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். அம்மன் முன் சொன்னபடி அங்கேயே தங்கிவிட்டாள்.

அம்மனோடு வந்தவர்கள் எவ்வளவு வேண்டியும் அம்மன் அவர்களுடன் வர மறுத்துவிட்டாள். உடன் வந்தவர்கள் தங்கள் தவறுதலுக்குப் பிராயச்சித்தமாகத் தங்களிடமிருந்த பட்டாக் கத்திகளை எடுத்துத் தங்களைத் தாங்களே வெட்டிக் கொள்ளலாயினர். அவர்களது துன்பத்தை அம்மன் தாங்கிக் கொண்டாள். அவர்களும் பிடிவாதமாக மார்பிலும் தோள்களிலும் மீண்டும் மீண்டும் வெட்டிக்கொண்டார்கள். அவர்களது உடல்களிலிருந்து இரத்தம் வழிந்ததே தவிர, அவர்களுக்கு ஒரு சிறிதும் துன்பம் ஏற்படவில்லை. அந்தத் துன்பத்தையெல்லாம் அம்மனே ஏற்றுக்கொண்டாள்.

தேவாங்க மக்களின் பக்தியை மெச்சி அம்மன் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தாள். தேவாங்கர்கள் எப்போது வேண்டிக்கொண்டாலும்தான் நீர் நிலையில் எழுந்தருளுவதாகவும், பிறகு அங்கிருந்து ஒரே நாளில் கோவிலுக்கு அழைத்துச் சென்றால் தான் சகல சக்திகளோடு அங்கு எழுந்தருளுவதாகவும் வரம் அருளினாள்.

அம்மன் தங்கிய இடம்பற்றி வேறு ஒரு செய்தியும் கூறப்படுகிறது. அம்மன் நின்ற இடத்தில் ஓர் ஆவாரஞ் செடி இருந்தது என்றும், அதனால் தேவாங்கர்கள் எப்பொழுது வேண்டிக் கொண்டாலும் ஆவாரஞ் செடி நிழலில் பாகு என்னும் கத்தியின் இடமாகத்தான் எழுந்தருளுவதாகவும், தன்னை ஒரே நாளில் கோவிலுக்கு அழைத்துச் சென்றுவிட வேண்டுமென்று கூறியதாகவும் சொல்லப்படுகிறது.

இச்செய்தியைக் கேட்ட குலமக்கள் அனைவரும் ஒன்று கூடி அம்மன் குறிப்பிட்ட இடத்திலிருந்து ஒரு நல்ல நாளில் அம்மனைக் கோவிலுக்கு அழைத்துச் செல்வதற்காக வருந்தி வருந்தி அழைத்தனர். தங்கள் பக்தியை அம்மனுக்குக் காட்டுவதற்காகக் கத்திகளை எடுத்து, முன்போல் மார்பிலும் தோள்களிலும் அலகு போட்டுக்கொள்ள ஆரம்பித்தனர். சிலர், அம்மனின் புகழ்பாடும் தண்டகம் என்னும் உணர்ச்சிப் பாடல்களை வீராவேசமாகப் பாடினர். தண்டகங்களில் தன்னைப்பற்றிக் கூறப்பட்ட வீரவர்ணனைகளைக் கேட்ட அம்மன் பெருமகிழ்ச்சி அடைந்தாள். தன் குலமக்களின் வேண்டுகோளை ஏற்றுக் கோவிலுக்கு வந்து சேர்ந்தாள். கோவிலுக்கு வந்ததும் அம்மனை ஸ்ரீ சௌடேஸ்வரி என்ற பெயரில் பிரதிஷ்டை செய்தார்கள். இறைவனும் தான் கொடுத்த வரத்தின்படி அங்கு எழுந்தருளினார். பெருமானை ஸ்ரீ இராமலிங்கம் என்ற பெயரில் பிரதிஷ்டை செய்தார்கள். அன்று முதல் அம்மனுக்கு ஸ்ரீ ராமலிங்க சௌடேஸ்வரி என்னும் திருப்பெயர் வழங்கி வருகிறது.

தேவாங்கர்கள் நாள்தோறும் சௌடேஸ்வரி அம்மனை வழிபடுகிறார்கள். ஆவணி அவிட்டம், விஜயதசமி போன்ற நாட்களில் விசேஷ வழிபாடு நடைபெறுகிறது. இதுவல்லாமல், சில ஆண்டுகளுக்கு ஒரு முறை அம்மன் திருவிழாவையும் நடத்துகிறார்கள். முன்னோர்கள் செய்த முயற்சிகளின் அடிப்படையிலேயே ஸ்ரீ சக்தி அழைப்பு, ஸ்ரீ சாமுண்டி அழைப்பு முதலிய நிகழ்ச்சிகள் அமைக்கப்பட்டுச் சௌடேஸ்வரி அம்மன் திருவிழா இப்போதும் நடைபெற்று வருகிறது. சக்தி அழைப்பு, சாமுண்டி அழைப்பு, மகா ஜோதி ஊர்வலம் ஆகியவைகளின்போது தேவாங்க குலமக்களாகிய வீர குமாரர்கள், தேவதாஸன் காலத்தைப் போலவே கூர்மையான நீண்ட கத்திகளால் தங்கள் தோள்களையும் மார்புகளையும் தாக்கி அலகு போட்டுக் கொள்வது பக்திப் பரவசத்தை உண்டாக்கி மெய் சிலிர்க்க வைக்கிறது.

தமிழ் நாட்டில் சேலம் மாவட்டத்தில் கன்னட தேவாங்கர்கள் அம்மன் கோவிலில் திருவிழா நடத்துவது இல்லை. பல்லாயிரக்கணக்கான மக்கள் ஒன்று திரண்டு அம்மனைத் தரிசிக்கத் தகுந்த பெரிய மைதானத்தில் அழகிய பந்தல் போட்டு அங்கே கோவில் அமைக்கிறார்கள். அங்குள்ள ஒரு மேடையில் வெல்லக்கட்டிகளால் கோட்டைச் சுவர்போலக் கருவறை அமைத்துக் கரும்புப் பந்தலிட்டு வெற்றிலைப் பசுங்கொடிகளைப் பரப்பி அந்த நிழலில் அம்மன் விக்ரகத்தை எழுந்தருளச் செய்து திருவிழாவைக் கொண்டாடுவது ஒரு சிறப்பு அம்சமாகும். 



# திருமலை பிரம்மோத்சவம்

"திரு" எனும் சிறப்பு அடைமொழியுடன் கூடி, 'வினைச்சுடரை அவித்து மனச்சுடரைத் தூண்டும் மலை' எனவும், "மனக்கவலைத் தீர்ப்பான் மலை" எனவும் பெருமை பேசப்பெற்று, பக்தி உலகத்தின் சிகரமாக விளங்கி, சமஷ்டி தெய்வமான அவ்நெடியோன் நின்ற வண்ணம தனனருள் புரிந்திடும் "திருமலையானது நாள்தோறும் ஆயிரக்கணக்கான பக்தாகள் வருகை புரிந்திடும் புராணச் சிறப்பும், வரலாற்றுப் பெருமையும கொண்ட ஒரு திருத்தலமாகும். நாளும் விழாக்கோலம் கொண்டிடும இத்திருமலை பிரம்மோத்சவம எனப்படும பெரு விழாவின் போது இந்துககளின பகதி நெறிக்கும், கலாசாரத்திற்கும ஒரு பெரும் எடுத்துக்காட்டாக அமைந்திடும் இதுபோது திருமலையில் கூடும் ஒவ்வொரு யாததிரிகரின் உள்ளத்தும் ஒரு புத்துணர்வினையும், புது மலர்ச்சியினையும் தோற்றுவிக்கும் வலிமையுடையதாக இப்பிரம்மோத்சவம் அமைந்திடும் என்பது யாத்திரிகர்களின் தனி அனுபவமாகும். சுற்றிலும் புண்ணியத் தீர்த்தஙகளும், பலவகையான காய்கனிகளைத் தந்திடும் மரஞ்செடிகளும், வண்ணமும் மணமும் கொண்டு விளங்கிடும் மலர்த்தோட்டங்களும் சேர்ந்து இப்பிரம்மோத்சவத்தின் போது திருமலையினை உண்மையிலேயே இக்கலியுகத்தின் ஒரு தேவலோகமாகவே காட்டிடும்.

உத்சவங்களில் காலோத்சவம், ஸ்ரத்தோத்சவம், நிமித்தோத்சவம் என்று மூன்று வகையாக ஆகமங்கள் கூறும். இவற்றில் காலோத்சவம் என்பது குறிப்பிட்ட நாட்களின் போது மட்டுமே நடைபெறும். பிரம்மோத்சவம் என்பது இவ்வகையில் அடங்கும். உத்சவம் என்பது "தியாகம்" என்று பொருள்படும். அதிலும் "மஹோத்சவம்" என்பது "பெருந்தியாகம்" எனப்படும. இங்கு தியாகம் என்பது விழாவில் கூடும் பக்தர்கள் தங்கள தன்னலப் பண்புகளை விடுத்து, பரந்த சமுதாய நோக்கில் ஒருமைப்பாடு உணர்வுடன் செயல்படவேண்டும் என்பதைக் குறிப்பதாகும.

சாதாரணமாக பிரம்மோத்சவத்தினை 3 அல்லது 5 அல்லது 7 அல்லது 9 நாட்களுக்கு நடத்தலாம். சாந்தரமானத்தைச் சார்ந்த ஆச்வயுஜ மாதத்தில் (தமிழ் புரட்டாசி பிற்பகுதி) நவராத்திரியின்போது 9 நாட்களுக்கு திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமியின் வருடாந்திர பிரம்மோத்சவம் நடைபெறும். மூன்று வருடங்களுக்கொரு முறை அதிக மாதம் வருவதால் அப்பொழுது பாத்ரபத மாதத்தில் (தமிழ் ஆவணி பிற்பகுதி) இத்திருவிழா நடக்கும். அதுபோது ஆச்வயுஜத்தில் "நவராத்திரி உத்சவம்" என தனியாக மற்றுமொரு பிரமமோத்சவம் நடைபெறும்.

புராணச் சான்று ;

ஸ்ரீ வேங்கடாசல மஹாத்மியத்தில் பவிஷ்யோதார புராணத்தில் 14வது அத்தியாயத்தில் பிரம்மாவினால் நடத்தப்பட்ட இப்பிரம்மோத்சவத்தின் வர்ணனை வருகின்றது.

ततोऽपरेषु दिवसि ध्वजारोहमहोत्सवम् ।
आरम्भावभृथान्तं च पुष्पयागान्तमेव च ॥

.......................................

.......................................

# மகிழச் செய்யும் திருமலை

ஆக்கம : கவிஞர் சோமசுந்தரப் பெருமாள்-தங்கவயல்.

மறைபோற்றும் நாயகன் மணணில் வநது—மககள்
குறைதீர்கக வெனறே குடிகொண்ட குருமலை
உறைபுகழ் பலபெற்ற உன்னத சகதியுடன்—இங்கு
நிறைசேர்த்து நிற்பது நிமலன் திருமலை.

அங்கம் கொண்டு அடைநதிட்ட இப்பிறப்பில்—நாம்
சங்கமம் ஆகியே சாா திருவடிக்கு ஒருமலை
பங்கமிலா பத்மநாபன் பாதைகாட்டி நிறக—மாந்தர்
மங்காத செல்வமுடன் மனம்கழிக்கும திருமலை.

பாற்கடலில பள்ளிகொணடு பரிதவிககும மாநதாக்கு—ஓர்
சேர்கடல் எனசசிந்தை சோககும மலை
தேர்சென்று நிலையடைதலாய் தேகத்துக்கு இடமெனை—நல்
ஊர்கொண்டு செழித்தோஙகி உனையழைக்கும் திருமலை.

தெனபதியின் தெள்ளிய சீரோடு தெளிவுகாண—மாந்தா
அன்புடன் கோவிந்தாவென அழைதது வருமலை
மன்னவனும் மாதவனும் மகிழ்சேர் தூயவனும்—கலியில்
தின்னவனும் திகழொளியாய் திழைககும் திருமலை.

மாதங்கள பன்னிரண்டும் மாலவனை காணவென்று—தினம
பாதங்கள் பதிந்து பகதியால் திளைக்கும் மலை
நாதங்கள் பலசேர்நது நாரணனை அழைத்தே—நான்கு
வேதங்கள் கூடினதோவென விளிக்கும திருமலை.

எண்பத்து நானகுலட்சம் எடுக்கும் பிறவிகளில—நாம்
எண்ணில் எத்தனை என்றுணரும் கண்மலை
விணணில் போனவுயிர் வீணாய் அலையாத—நிலை
நண்ணியே பக்தர் நாடிடும் திருமலை.

அலமேலு மங்கையோடு அந்தப்புரம் இருநதாலும்—மாந்தர்
சலனமதைக் கண்டு சாரஙகபாணி சார்ந்தமலை
தலமதில் நிகர்பெற்று தாயகமாய் சாந்தியென—இந்த
உலகினில உயர்வுடன ஒளிரும் திருமலை.

மலைதனை குடைபிடித்த மாயவனே மாந்தர்க்கு—இன்று
நிலைதனை உணர்ததவென நெடியோனும் நின்றமலை
வலையாம் பாசம்தனில் வகையாய் சிககாது—நமக்கு
தலையாய முக்திதரும் தண்ணிழல் திருமலை.

நடந்தார் இளைப்பாற நமககுற்ற பொய்கையென—வாழ்வை
கடநதார் கணகொண்டு கரியோனைக காணுமமலை
படாநதார் பாவஙகளை பனிபோல் நீககிவிடும—ஒளி
அடாந்து வநதும்மை அணைக்கும திருமலை.

கோதையின மாலைதனைக கொண்டு சூடியே—எழில்
பாதைதனைக் காட்டும பரநதாமன வாழுமலை
காதைகள் பலப்பல கண்ணனைப் புகழ்நதாலும—பிறப்பின்
போதைதனைப் புகட்டியே புணணகற்றும் திருமலை.

வேங்கடவன் வாழும்மலை விமலன் சூழும்மலை—தினம்
ஏங்கிடும் நெஞசங்களே என்னெதிரே வாருமென
ஓங்கிய கரங்களால் உயர்சீர் பாதம்காட்டி—உம்மை
தேங்கிய அன்பினுல் தினமணைக்கும் திருமலை.

ஆதவனும் தரிசிதது ஆதங்கம் தீர்ததிட்டார்—ஒரு
சாதகமாய் குபேரனும சார்நத செலவமலை
பாதகங்கள் பலசெய்து வருவோரின பாபமகறறி—தமிழ்
மாதங்களில் மாாகழிபோல் மகிழச்செய்யும் திருமலை.

हरिद्रः पिङ्गलश्चूर्णैरभिषिक्तस्य मङ्गले ।
समुद्यक्तस्यादभृथस्नानमाङ्गलिकोत्सवे ॥

மேற்குறிபபிட்ட பகுதி வராஹ புராணத்தைவிட இபபிரம்மோற சவததைப் பற்றி அதிகம விளக்குகிறது. துவஜாரோஹணம் முதற் கொணடு இறுதிநாளான அவப்பிரதோதசவம் புஷ்பயாகம் வரை, தகுந்த வைதீக முறையோடு ஸ்ரீநிவாசப் பெருமாளின உத்சவருககு பிரம்மா விழா நடத்தியதாகக கூறப்படுகிறது. பிரம்மா இவ்வுத்சவத்தைத் தொடக்கி வைததறகு பிரம்மாண்ட புராணததில் வரும் 'ஸ்ரீ வேங்கடேச ஸகஸ்ரநாம' வரிசையில் வரும் ब्रह्मोत्सव महोत्सुकाया (२३०) மற்றும ब्रह्मक्लृप्तोत्सवाय श्री वेङ्कटेशाय नमः । (४९) என்ற வரிகள் சாட்சியாக உள்ளன.

வராக புராணத்தின் 19-வது அத்தியாயம், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின பிரம்மோத்சவத்தைப் பற்றி அறிவிக்கின்றது. கலியுகத்தில், தீமைகளினின்று மக்களைக் காப்பாறற இத்திருமலையில் திருமால் வேங்கடவனாக அவதாரம் கொணடு, பிரம்மாவின் வேண்டுகோளுக்கிணங்கி இத்திருமலையினையே தன் இருப்பிடமாகக் கொண்டதாகவும் கூறுகினறது. மேலும் பிரம்மோத்சவத்தைப் பற்றி குறிப்பிடுகையில்,

" उच्चैः श्रवसमश्वं च गजमैरावतं तथा ।
अनन्तं नागराजं च गरुडं त्रयीमयम् ॥
................. ......................
.........................................
कविभिर्न्विभिश्चैव गायकैः पाठकैस्तथा ।
नित्यं वेदैः स्तूयमानः श्रीनिवासः परात्परः ॥

விலையுயர்ந்த, அரிய ஆபரணங்களை அணிந்து கொண்டு, ஸ்ரீவேங்கடேஸ்வரர் உச்சைஸ்வரர் எனும் குதிரை, ஐராவதம் என்னும யானை, சேஷ எனும் பாம்பு, கருடாழ்வார் ஆகியோர் மீது எழுந்தருளி, வேத மநதிரங்கள் முழங்க ஸ்ரீ லக்ஷ்மியுடன் திருவீதி வலம் வருவது விளக்கப்பட்டுள்ளது.



**கல்வெட்டுச் சான்று :**

திருமலையில் கோயில் பிராகாரசுவர்களில் பல கல்வெட்டுக் குறிப்புக்கள் பல காலத்தால், சரித்திர மாற்றங்களால் அழிக்கப்பட்டாலும், சிதைக்கப்பட்டாலும், குறிப்பாகக் கோயிலின் முதல் பிராகாரத்தின் வடக்குச் சுவரில் உள்ள கல்வெட்டு ஒன்று அப்போது நடைபெற்ற பிரம்மோத்சவ விழாவினை அறிவிக்கின்றது.

பல்லவ அரசைச் சார்ந்த சாமவை என்ற காடவன பெருந்தேவி இளவரசி, இறைவனுக்கு மார்கழி மாதத்தில் ஏழுநாள் விழா எடுத்ததாகவும் மேலும் இறைவனுக்கு அவ்விழா நடத்தப் பொன்னும், பொருளும் கொடுத்ததாகவும், இவ்விழா, உலகில் சூரிய சந்திரர் இருக்கும் வரை நடத்தப்படவேண்டும் என்று விரும்பியதாகவும் மேற்கண்ட குறிப்பிலிருந்து தெரிய வருகின்றது. இவ் விழாவிற்காகச் சாமவை, வெள்ளியில் மலைய குன்றபெருமாள் என்ற ஸ்ரீநிவாசரின் விக்ரகத்தைச் செய்து கோயிலில் பிரதிஷ்டை செய்ததாகவும், இறைவனுக்கு விலையுயர்ந்த கல் வைத்த கிரீடமும், மாலையும் பல பொன் ஆபரணங்களையும் ஈந்ததாகவும் தெரிகின்றது. சாமவை நடத்திய இவ்விழா இரண்டாவதாகும். முதல் பிரம்மோத்சவ விழாவை புரட்டாசி மாதத்தில் நடத்தியதாகவும் மற்றொரு குறிப்பிலிருந்து அறிய முடிகின்றது. டாக்டர் எஸ்.கிருஷ்ணசுவாமி ஐயங்கார் அவர்கள் தன்னுடைய "திருப்பதி வரலாறு" (History of Tirupati) எனும் நூலில் சாமவையின காலத்தைப் பல்லவ மன்னனான தண்டிவர்மன் காலத்துடன் இணைத்து நிறுவுவதால் சாமவையின் காலம் கி. பி. 7 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது கி.பி. 8 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று துணியலாம்.

கி. பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து, கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் புரட்டாசி, மார்கழி மாதங்களில் மட்டுமின்றி ஆடி மாதத்திலும் திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்குத் 'திருக்கோடித் திருநாள்' என்ற பெயரில் மற்றுமொரு பிரம்மோத்சவம் நடந்து வந்ததாகத் தெரியவருகின்றது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ ராமானுஜரின் உத்தரவினால், இறைவனுக்கு மற்றுமொரு பிரம்மோத்சவம் நடந்ததாக, இராமானுஜரின் பக்தரான அனந்தராயர் எழுதிய "ஸ்ரீ வேங்கடாசல இதிஹாசமாலை" எனும் நூலின் மூலம் அறிய ஏதுவாகின்றது. விஜயநகர பேரரசு காலத்





தில் இரண்டாவது ஹரிஹரன் எனும அரசன் (1344-1404) முலலே திரு வேங்கட ஜீயர் எனபவரைககொண்டு மாசி மாததகில இறைவனுககுத திரு மலையில மறசெருரு புதிய பிரம்மோத சவம நடததியதாக சில சானறுக ளின் மூலம அறிய முடிகினறது. இவவாருக கி.பி 16-ஆம நூற்ருண டின் இறுதிவரை மாதம ஒன்றிறகு ஒரு விழா வீதம ஆனி, வைகாசி மாதஙகளேத தவிாதது, இறைவ னுககு ஆணடொன்றுககுப் பதது பிரமமோத்சவங்கள் நடததபபட்டு வநதன எனறு 'கூறலாம காலப் போககில மற்ற விழாககள நிறுத்தப பட்டு ஸ்ரீவேஙகடேஸவரரின பிறநத நாளான சிரவண தினததில முடியும புரட்டாசி மாததகில் மட்டும பிரம மோத்சவ விழா கொணடாடபபட் டது

கி.பி. 19-ஆம நூறருண்டின முற பகுதியில இபபிரமமோதசவம எவ வாறு கொணடாடப்பட்டது எனற செயதியும சேகரிக்கபபட்டுளளது. இந்தியா ஆங்கிலேயரின ஆட்சிபில இருநத போது, அபபோதைய ஆந்திரப பிரதேசம, சிததூர் மாவட்ட கலெகடர் திரு. ஜியார்ஜ் ஸ்ரேட் டான எனபவருககுக கிழக்கிநதியக கம்பெனி, திருமலே கோயில் பறறிய முழுச்செய்தியினேச் சேகரிககுமாறு உத்திரவிட்டது 1823-ம் ஆண்டைச் சார்நத அககலெகடரின செயதித் தொகுபபான ' சவால்-ஏ-ஜவாப்" அப்போது நடநத பிரமமோதசவத தைபபறறிய முழு விவரஙகளுடன நன்கு விளககியுளளது

ஆகவே, இபபிரமமோதசவம் எப பொழுது யாரால் முதன் முதலாக ஆரமபிககபபடடது எனபதைப் பற றிய அதிகாரபபூாவமான சரித்திரச் சானறுகள கிடைக்கவில்லையாயினும, இவவிழா பனனெடுங காலமாகக கொணடாடப்பட்டுச சுமாா 15 நூற ருண்டுகளாக பகதாகளே வெகுவாகக கவாநது வருகினறது எனபது தெளிநத உணமை.

**வாகனங்களின முககியததுவம**

இபபிரமமோத்சவததின போது இறைவன அமாநதிருந்து திருவீதி வலமவரும வகையில் பல வாகனங்கள பயனபடுததபபட்டு வருகினறன. பிரமமன விஸவகாமாவைககொண்டு, வேஙகடவன் தன் துணைபபெண் தெய்வங்களுடன எழுந்தருளி திரு வீதி உலா மேற்கொளளும் வகையில் பலவகையான வாகனஙகளேச் செய் வித்ததாகவும கூறபபடுகிறது.

ஆனல் இவவாகனஙகள சில தத்துவக கருததுககளேக கொண்டு விளஙகுகினறன. யானே, குதிரை, பலலககு, ரதம போனற வாகனங் கள பயனபடுத்துவதறகுக காரணம், இறைவன ராஜாதிராஜன எனபதைக் காட்டவே இவவண்டம முழுவதை யும தன ஆட்சியின கீழ கொணடு அருளாட்சி புரியும ஜகதீஸவரன எனபதைக கூறவேயாகும.

இபபிரமமோதசவம பதது நாட் கள கொணடாடப்பட்டாலும. முதல் நாள அவவளவாக, எவவிதச சிறப்பு மினறிக கடநதுவிடும. முதல நாள் அஙகுரார்ப்பணம நாள் எனறு அழைககபபடும. அனறுமாலேவிஷ்வக் சேனா எனறு அழைககப்படும் சேனே முதலியார் எழுந்தருளச செயவார். யாகசாலேககான புனித இடததைத் தேர்நதெடுக்க அனறு அவர் திருமலே



யின் நான்கு வீதிகளில் எழுந்தருளு வார். அவ்விடத்தில் ஒவ்வொரு நாளுக்குரிய ஹோமம் ஆரம்பிக்கப் படும். விழாவிற்குரிய எல்லா ஏற் பாடுகளையும் அவர் மேற்பார்வை யிட்டு, அடுத்தநாள் ஆரம்பமாகும் விழாவிற்கு எல்லாக்கடவுளர்களையும் அழைப்பார். திருமலைராய மண்ட பத்தில் அளிக்கப்படும் மரியாதையை ஏற்றுக்கொண்ட பின், அவர் அனந் தாழ்வார், கருடாழ்வார், சுதர்ஸனர் ஆகியோருடன் யாகசாலைக்குச் செல் வார்.



அடுத்தநாள் முதற்கொண்டு அடிப் படைவிழா ஆரம்பமாகும். இதைக் குறிக்கும் வகையில் தூய ஆடையில் ஓவிய நுணுக்கங்களுடன் கருடனின் உருவம் தீட்டப்பட்ட கருடத்துவஜம் எனும் கொடி கோயிலிலுள்ள இறைவனின் கொடி மரத்தில் ஏற்றப்படும். இதுபோது விலையுயர்ந்த பொன்னுபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு வஜ்ரகவசம், மலர் மாலைகள அணியப்பெற்ற இறைவ னின் உத்சவமூர்த்தியான ஸ்ரீ மலை யப்பசுவாமி தன் இருதேவியர்களான ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோருடன் தஙகத திருச்சியில் (வாகனம) திரு மலைராய மண்டபததிற்கு எழுந்தரு ளுவார். குறிப்பிட்ட நன் முகூர்த் ததில், வேதங்கள் முழங்க, நாதஸ் வர இனனிசை எங்கும் பரவத் தலைமை அர்ச்சகரால் கருடதவஜ கொடி கொடிமரத்தில் ஏற்றப்பட்டு ஆகம விதிப்படி, அக்கொடி மரத்தில் சுற்றப்படும். இந்நிகழ்ச்சி துவஜாரோஹணம் எனப்படும். துவஜாரோஹணத்திற்குப் பிறகு இத்திருமலைக் கிராமத்தில் உள்ள எவரும் ஏழுமலையானைத்தவிர மற்றைய தெய்வங்களை வழிபடமாட் டார்கள் என்றும், எவரும் இப்பிரம் மோத்சவத்தின் போது கிரா மத்தை விட்டு வெளியே போகமாட் டார்கள் என்பதும் ஒரு மரபாக இருந்து வந்துள்ளது.

இவ்விழா நன்முறையில் நடக்க தெய்வீகச் சிந்தனைக்கு எவ்வித இழுக்கும் நேரா வண்ணம் பாதுகாக்க எட்டுத்திக்குப் பாலகர் களுக்கும் உத்திரவிடப்படும். இவ் வாறு ஆரம்பிக்கப்படும் இவ்வொன் பது நாள் விழாவின் போது, இறை வன் பல்வேறு வாகனங்களில் காலை யிலும், இரவிலும் திருவீதி வலம் வருவார். இன்னின்ன நாட்களில் இந்தந்த வாகனங்களில் இறைவன் எழுந்தருளுவார் என்பதற்கு எவ்வித மான ஆகமவிதிகளோ அல்லது வரை யறைகளோ இல்லை. இப்போது உள்ள வாகன முறைகள், அவ்வப் போது வந்த அடியார்களின் விருப்பு டன் செய்த ஏற்பாடுகளைப் பொறுத்தே வழக்கில் இருந்து வரு கின்றன. பிரம்மோத்சவத்துடன் இணைந்த மற்றுமொரு குறிப்பிட்ட நிகழ்ச்சியும் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது. இவ்விழாச் செய்தி யினை எங்கும் தெரிவிக்கும் வகையில் கோயில்முன் அதிர்வெடிகளை வெடிக் கும் பழக்கம் இருந்து வந்ததாகத் தெரிய வருகின்றது. கி. பி. 1583



ஆம் ஆண்டைச் சார்ந்த ஒருகல்வெட்டின் மூலம் எட்டூர் திருமலை நம்பி குமார தாத்தாச்சாரியார் எனபவர் 20 ரேகை பொன் செலவில் பெஞலி பாணம் என்ற ஒரு வெடியை நன் கொடையாகக் கொடுத்ததாகத் தெரிய வருகின்றது. ஆனல் 'அதிர் வெடி' எனறு எங்கும குறிக்கப்படவில்லையாயினும் போர்ச்சுகீசியர், டச்சுக்காரர்கள், பிரஞ்சுநாட்டினர், ஆங்கிலேயர் ஆகியோர் இந்தியாவுக்கு வந்த பிறகுதான் இத்தகு வெடிகள தென்னிநதியாவில வழக்கில் பரவலாக வந்தது.

இவ்விழாவை பிரம்மாஆரம்பித்து வைத்ததாக புராணங்கள் செப்புவதால், அதன அடையாளமாக ஒவ்வொரு நாளின் வாகன உத்சவஙகளின போதும் பிரம்மரதம் எனும ஒரு சிறு ரதம (வெறறு ரதம்) வாகனங்களின் முன இழுத்துச செல்லப்படும். இதனுடைய மற்றொரு பின்னணி என்னவெனின், இவ்விழாவின் போது பிரம்மன் திருமலையில் தங்கி, விழா நன்முறையில் நடக்க அவர் மேற்பார்வை புரிவதாகப் பொருள்படும். முதல் நாள் இரவின் போது மலையப்பசுவாமி தன் இரு தேவியருடன ஏழுதலைகளைக் கொணட பெரிய சேஷ வாகனத்தில் திருவலம மேற்கொள்வார்.

முதல் வாகனமான சேஷ வாகனம் பரமபதத்தில் பள்ளிகொண்டிருக்கும் பரமபொருளுக்கு எப்போதும் சேவை புரிந்து கொணடிருக்கும் பாம்பின் நித்ய கைங்காய பெருமையினைப்பறை சாறறும். இது மககளுககுத் தேவையான இடைவிடா இறையுணர்வை உணர்த்தும்.

இரணடாம் நாள் காலையில் நடத்தப்படும் சிறிய சேஷ வாகனத்தில மலையப்பசுவாமி மட்டும் எழுந்தருளுவார். அன்று இரவு இறைவன் அனனவாகனமான ஹமஸ வாகனத்தில் திருவீதி வலம் புரிவாா.

முனனொரு காலத்து, அரககன் ஒருவன் பிரம்மனிடமிருநது வேதங்



களைக் கவர்ந்து செல்ல, பின்னர் பிரம்மா ஆதிகேசவனிடம முறையிட அவருக்கு உதவும்வகையில் இறைவன் அன்னப்பறவை உருவம கொணடு அரக்கனை அழித்து வேதங்களை மீட்டுக்கொடுத்தான். இறைவன் தனக்குப் புரிந்த அருட்திறததை நினைவிற் கொண்டு பிரம்மா இவ்வன்ன வாகனத்தை வழக்கில் கொண்டதாகக் கூறப்படுகிறது. இது (அன்னப் பறவை வாகனம்) தன்னைச் சரணடைநதார்க்கு விரைவில் அருள் தருவான் என்பதையும், வலிமையுடையார்க்கும் பரம்பொருள்தான் கதி என்பதையும கூறுகினறது. அன்று இறைவனை வழிபட்டால் அவர்களுடைய ஹிம்சைகள் (துன்பங்கள்) மறைநது விடுமெனறும் நம்பப்படுகிறது. அன்று இறைவன சரஸ்வதி அவதாரம் புனைவார். மூனறும்நாள காலை இறைவன் சிம்ஹ வாகனத்திலும், இரவு முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட முததுப் பந்தலிலும வலம் வருவார். மிருகங்களுக்கெல்லாம் தலைவனுகவும் மிருகங்களிடையே வீரம் பொருந்தியதாகவும் எப்படிச் சிங்கம் எனும் விலங்கு விளங்குகினறதோ அதே போனறு உலக ஜீவராசிகளுக்கெல்லாம் தலைவனுகவும, எல்லாவற்றையும் விட சர்வ வல்லமைப் படைத்தவனுகவும் சாரங்கன் விளங்குகினருன் எனபதைக் காட்டவே, உத்சவத்தின போது ஸிம்ஹவாகனம் பயனபடுததபபடுகிறது. மனிதாகளின துனபஙகளைப போககி, முழுவதுமாகத் தனனைச் சரணடைந்தார்க்கு அருள் புரிய இறைவன இவவேழுமலைகளில், தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி எழுந்தருளி உள்ளான். இதனைக் குறிககும் வகையில் நான்காம் நாள் காலை, கேட்டதைக் கொடுககும் கல்ப விருக்ஷம் வாகனத்தில திருவீதி வலம் வருவார். அன்று இரவு தஙகத தகடுகளால் வேயப்பட்ட விமானததைக கொண்ட சர்வபூபால வாகனத்தில் எழுநதருளுவார். இவ்வாகனம் 7 அடி உயரம கொணடு, தங்கத் தகடுகளால் போர்த்தப்பட்டிருக்கும். மின விளக்குகளின் ஒளியால் இவ் வாகனம பன்மடங்கு ஒளிர்விட, வாகனத்தின்நடுவில் மலையப்பசுவாமி விலையுயர்நத ஆபரணங்களை அணிந்து கொணடு காட்சி தரும் அழகு கண்க

ளுக்கு விருந்தாக அமையும். அடுத்த நாள் காலை உத்சவத்தின் போது இறைவன் மோகினி அவதாரம் புனைவார். இதுபோது சரிகை வேலைப் பாடுடைய பட்டுத் துணியைப் புடவையாகக் கொண்டு சந்திரக்கல் பதித்த கிரீடத்தை அணிந்து, மேலும் வைரக்கல் பதித்த புல்லாக்கு என்ற முகக்குத்தியை அணிவார். காதுகளில் வைரத்தோடுகள மின்ன, சங்கு, சக்கரம், ஏந்திய கைகளில் பொன் தாமரை மொட்டுக்கள் விளங்கும். இத்திருக்கோலத்தில் 'அவன்' ஆகிய இறைவன் 'அவள்' ஆக மாறி, முந்தி ஒருநாள் தேவர்களுக்கு அமிர்தம் வழங்க, மோஹினி அவதாரத்தில் தோன்றிய இறைவனின் அழகிய கோலத்தில் மயங்கிய அரக்கர்களைப் போன்று, பெண் வேடம் புனைந்த இறைவனின் அலங்காரக் கவர்ச்சியில் பக்தர்கள் தங்களை மறந்து தெய்வ சிந்தனையில் தோய்வர் எனக் கூறின் அது மிகையாகாது. நேர்வழியில் நடப்பவர்க்கும் தீமையை அழிக்கவும் இறைவன் என்றும் துணையிருப்பான் என்பதைப் பக்தர்களுக்கு மோகினி அவதாரம் புனையும் காட்சி கூறாமல் கூறுகின்றது. பிரம்மோத்சவ விழாவிற்கு மேலும் சிறப்பு சேர்க்கும் வகையில், அன்று இரவு இறைவன் தனக்குப் பிடித்த கருடவாகனத்தில் திருவீதி வலம் வருவார் அதுபோது திருமலை பக்திக்கோலம் பூண்டு மக்கட் கடலாக விளங்கும். அன்று இரவு கருடவாகனத்தில் அமரும் மலையப்பசுவாமி, அன்று மட்டும் அரிதாகப் பயன்படுத்தப்படும் லக்ஷ்மீ ஹாரம், மகர கண்டிகை, என்னும் விலையுயர்ந்த ஆபரணங்களை அணிவார் மேற்கூறிய ஆபரணங்கள், பிரம்மோத்சவத்தின கருட சேவையன்றுதான கோயில் கருப்பக்கிரகத்திலிருந்து வெளிக்கொணரப்படும். இககருடசேவையின போது சென்னை கோயில் குடை அறககுழுவினரால் அளிக்கப்படும் கோயில் குடைகள் சென்னையிலிருந்து கால்நடையாக, பக்திச சூழ்நிலையுடன் கொண்டுவரப் பட்டு இறைவனின் திருவீதி திருவுலாவிற்குப் பயன்படுத்தப்படும். மேலும்

# "திருவேங்கடமலை மஹிமை"

பாவங்களை எரித்துவிடுவதால் ஸ்ரீநிவாசன் உறையும் மலைக்கு வேஙகடமலை என்ற பெயர் ஏற்பட்டது. சேஷாசலமான அம்மலைக்கு திருவேங்கடமலை என்ற பெயர் எப்படி ஏற்பட்டது என்று நோக்குவோம்.

ஸ்ரீசைலத்திற்கு மேற்கே நந்தனபுரம் என்றொரு நகரம் இருந்தது. அந்நகரில் புரந்தரன் என்ற பெயருடைய ஓர் அந்தணர் வாழ்ந்து வந்தார அவர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினர். அவரது மகனின் பெயர் மாதவன். மாதவனும் தந்தையைப்போலவே வேதவிற்பன்னனாக விளங்கினான். மாதவனின் அறிவிற்கும் ஆற்றலுக்கும் ஏற்ப நற்குண மிக்க மங்கை நல்லாளாக சந்திரரேகை என்ற பெண் அவனது இல்லாளாக அமைந்தாள். இருவரும் இல்லறத்தில் அறம் வழுவாது அன்போடு வாழ்ந்து வந்தனர். ஒரு முறை மாதவன, தனது மனைவியோடு தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டான். இருவரும் ஒவ்வொரு திருத்தலங்கள் தோறும் சென்று, அங்குள்ள புண்ணியத் தீர்த்தங்களில் தூய நீராடி, இறைவனைப் போற்றிப் பணிந்து ஆங்காங்கே உள்ள நறுமலர்ச் சோலைகளில் தஙகியிருநது பல நாட்கள் இன்பமாய் வாழ்ந்து வந்தனர்.

இப்படியாகப் பயணம் செய்து கொண்டுவந்த இருவரும் ஒருமுறை அழகிய சோலையோடு கூடிய ஒரு மலைச்சாரல் அருகே இன்பமாகக் காலத்தைக் கழித்து வநதனர். அந்த சமயத்தில் மாதவனின் முற்பிறப்பு வினை வந்து அவனைப்பறறிக்கொணடது. அச்சோலையின் இயற்கை அழகைத் தனியாக ரசித்துக்கொண்டே வந்த மாதவன, அவ்வழியாகச் சென்றுகொண்டிருநத ஒரு புலைப்பெண்ணைக் கண்டான். அவளது எழில் பொங்கும் இளமை அழகில் உள்ளத்தைப் பறிகொடுத்த மாதவன் மதிமயங்கினான். அந்த மயக்கம் அவர்களிடையே ஒரு பிணைப்பை ஏற்படுத்தியது. மனைவிக்குத் தெரியாமல் அவளைத் தினமும் சந்தித்துக் கூடினான். ஒரு நாள் மனைவியைத் தனியாக அச்சோலையில் விட்டுவிட்டு, அப்புலைப்பெண்ணோடு ஓடி மறைந்தான். அவளைத் திருமணமும் செய்து கொண்டான். கணவனைப் பிரிந்த சந்திரரேகை பொல்லாத இடர்ப்பட்டு பரமபதம் அடைந்தாள்.

புலைப்பெண்ணோடு வாழ்க்கையைத் தொடங்கிய மாதவன், மறையை மறந்தான். வேதவிதியை மீறினான். அந்தணர்க்குரிய வேத நியமநிஷ்டைகளைத் துறந்தான். புலால் உண்ணவும், மதுபானம அருந்தவும் தொடங்கினான். அவனைத் தோஷம பற்றிக்கொண்டது. தீவினை அவன உடலில பெரும நோயைத தோற்றுவித்தது. மாதவன இளமை குன்றினான் அந்த நிலையில் அவன் கையிலிருந்த செல்வமும் சிறுகச் சிறுகக் குறையத் தொடங்கியது. பணமும் இளமையும் உள்ளவரை மாதவனைச்சுற்றிச் சுற்றி வநத புலைப்பெண், பின் அவனை வெறுக்கத் தொடஙகினாள். ஒரு நாள் நோயுறறிருந்த மாதவனைத் தனியாக விட்டுவிட்டு மறறொருவனுடன் ஓடிவிட்டாள். மாதவன மனம் வாடினான். அகனி சாட்சியாக மணநத மனைவி சந்திரரேகையைத் தவிக்கவிட்ட கொடுமையை எண்ணிக கதறினான பிராமமண தாமததைத் தவிர்த்து, சண்டாளனாகத திரிநத அராஜகத்தை எண்ணிப் பலவாறாகக் கதறினான்.

அந்த நிலையில், மாதவன, ஸ்ரீமநநாராயணனை மனதிலே தியானித்தான். கால்நடையாகவே அந்த நோயுற்ற நிலையிலும் வைராக்கியத்துடன் நடந்து திருமலையை வந்தடைந்தான். திருமலையில் பாதம் பட்ட மாத்திரத்தில், அவனைப்பற்றிக்கொண்டிருந்த அத்தனை பாபங்களும் அற்று ஒழிந்து அவனது உடலைவிட்டு நீங்கிற்று. மாதவன் மீண்டும் இளமையும் புதுப்பொலிவும் பெற்று இளவரசனைப்போல் விளங்கினான். அத்திருமலை

(அடுத்தப் பக்கம் பார்க்க)

(முன பக்கத் தொடர்ச்சி)

யில் தவம்புரிந்து கொண்டிருந்த ஞானியர், மாதவனைப் பார்த்ததும், யாரோ இளவரசர்தான் வருகிறார் என்று எண்ணி விரைந்து சென்று வர வேற்று உபசரித்தனர். மாதவன தனது விருத்தாந்தங்களை ஒன்று விடாமல கூறினன். தவசிகளின திருவடிகளைப் பன்முறை சேவித்தான். திருமலையான் திருவருளால் மாதவன பாபம் நீங்கி புனிதம் பெற்றதால் அத்திருமலை அன்று முதல் திருவேங்கடமலை என்ற திருநாமத்தைப் பெற்றது. "வேங்கடம்" என்ற பதம் பாபத்தை எரித்தல் என்ற பொருளைக் கொடுப்பதால் வேங்கடமலை என்றாயிற்று.

மாதவனால் வேங்கடமலை என்று பெயர்பெற்ற திருமலையில் மாதவன் பல்லாண்டு காலம் அருந்தவம் புரிந்து பரம பதத்தை அடைந்தான. அன்று முதல் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள பாபம தீர்க்க இம்மலையை அடைந்து, பாபமெல்லாம் தீர்ந்து, பரமனின் அடி சேர்ந்த கதை நாடறிந்ததே. இன்று லக்ஷக்கணக்கில் பக்தர்கள் இம்மலையில் நடந்து பாபவிமுக்தர்களாகி நற்கதி அடைகின்றனர் என்பது மிகையாகாது.

தொகுப்பு : எஸ். சந்திரமௌளீஸ்வாமி - திருப்பதி.

ஆந்திர மாநில அரசின் சார்பில் பட்டுத்துணிகள் இக்கருடசேவையின போது இறைவனுக்கு வழங்கப்படும். அன்று அவ்வணிகளை மூலவரின திருமேனியினின்று மிகவும்பயபக்தியுடன் கழற்றித் தங்கத் தட்டுகளில் வைத்து மலையப்பசுவாமியின் மற்றைய அலங்காரங்கள முடிந்தபிறகு, இன்னிசை தொடர அவற்றை வாகன மண்டபத்திற்குக் கொண்டுவருவர். இவ்வாறு அவ் அரிதான அணிகலன்களை அணிந்து அருள் பொழியும் இறைவனை அன்று தரிசிப்பவர்கள் பேறு பெற்றவர்கள் தாம. கருடத்துவஜன் என்றழைக்கப்படும பரமனுக்கு, நல்லோரைக் காப்பாற்ற தான் விரைந்து செல்ல ஒரு வாகனமாக கருடன் விளங்கியது. ஆகவே இஃது இறைவனுக்கு உகந்ததால் கருடவாகனம் பயன் படுத்தப்படுகிறது.

அன்று இரவு இறைவன கோயிலுக்குத திரும்புவதற்குள் பொழுது புலர்ந்துவிடும். விரைவான சமயச சடங்குகளுக்குப் பிறகு அன்று காலை (ஆறாவது நாள்) இறைவன் சிறிய திருவடியில் அதாவது ஹனுமந்த வாகனத்தில் எழுந்தருளுவார். தலைவனையே தன் இறைவனாகக் கொண்டு காலம முழுவதும் தொண்டு ஒன்றினையே கடமையாகக் கொண்டு ராமாவதாரத்தில் பக்திக்கு ஓர் இலக்கணமாக விளங்கிய அனுமனின் சேவையினையும், ஆற்றலையும் நினைவு கூறும் வகையில் அனுமன் வாகனம விளங்கு கிறது. அன்று மதியம் இறைவன் தன் இரு தேவியருடன் மேற்கு மாட வீதியில் உள்ள வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளுவார். அங்கு அவருக்கு மணமிக்க நீரினால் திருமஞ்சனம் அல்லது அபிஷேகம் நடைபெறும். இதுவே வசந்தோத்சவமாகும். மாலை கோயிலுக்குத் திரும்பிய பின், அன்று இரவு இறைவன் யானை வாகனத்தை அலங்கரிப்பார்.

அடுத்த நாளான ஏழாவது நாள் அன்று, சூரிய சந்திர மண்டலங்களில் இறைவன் தங்கியிருப்பதாக கூறப் படுவதால், அதன் அடையாளமாக அன்று காலையிலும இரவிலும் முறையே சூரிய, சந்திரப்பிரபை களில் அவர் திருவீதி வலம் வருவார். ஒளிகளுக்கெல்லாம ஒளியாக விளங்கும் அவ்விறைவனின் சுடரொளியினின்றுதான சூரியனும், சந்திரனும் ஒளிப்பெற்று தங்கள் கடமையைச் செய்கின்றனா என்பதைக் கூறுகின்றன சூரிய, சந்திரப்பிரபை வாகனங்கள. திருமலையிலுள்ள சூரயப் பிரபை வாகனம் தென்னிந்தியாவிலேயே மிகப் பெரியது என்று கூறப்படுகின்றது. ஒளிவிடும் வஜ்ர கவசத்துடன், தலையில பெரிய விலையுயர்ந்த கல்பதித்த கொண்டை அணிந்த இறைவனின திருவுருவம் காணபோர் மனதை வெகுவாகக் கவரும்.

இந்நவராத்திரி பிரம்மோத்சவத்தின் போது, எட்டாம் நாளன்று இறைவன் தன் தேவியருடன் குறிப்பிட்ட நன்முகூர்த்தத்தில் வேதங்கள் முழங்க, மங்கள வாத்தியம் ஒலிக்க நன்கு அலங்கரிக்கப்பட்ட தேரில் அழகிய திருக்கோலத்துடன் எழுந்தருளுவார். நன்கு தூய்மையாக்கப்பட்ட, கோயிலைச சுற்றி அகன்ற மாடவீதிகளில் தேரானது பக்தர்களால் இழுக்கப்பட்டு குறித்த நேரத்தில் தேரடியைச் சேரும். அன்று மாலை வரை இறைவன தேரில் வீற்றிருந்து பக்தர்களுக்குக் காட்சி வழங்குவார். ஜாதிமத பேதமின்றி, எல்லோரும் ஒரு குலம என்னும ஒருமைப் பாட்டுணர்வினை மக்கள் உணர்ந்து செயற்பட வேண்டும் என்பதைத்தான் தேரில் இறைவன் பவனி வரும் காட்சி கூறுகிறது. அன்று இரவு இறைவன் குதிரை என்ற அஸ்வ வாகனத்தில எழுந்தருளுவார்.

ஒன்பதாவது நாள் அவப்ருத உத்சவம் (தீர்த்தவாரி) நடைபெறும். இதுதான் கடைசி உத்சவம். உபய நாச்சிமார்களுடன் ஊர்வலமாக சுவாமி புஷ்கரணியின் அருகில் உள்ள ஆதிவராஹ ஸ்வாமி ஸன்னிதியை அன்று மதியம் அடைவார். பிரம்மோத்சவம் மிகச சிறப்புடன் நடைபெற்றதைக் குறிப்பிடும் வகையில் அன்று இறைவனின் சுதர்ஸனம் குறிப்பிட்ட நன்முகூர்த்தத்தின் போது புஷ்கரணியில் இறக்கப்படும. இதுபோது யாத்திரிகர்களும புஷ்கரணியில் மூழ்கி எழுந்தால அவர்களுடைய பாவங்கள் கரையும் என்று நம்பப்படுகிறது. இந்நிகழ்ச்சியை தீர்த்தவாரி திருமஞ்சனம் எனவும் கூறுவர். இப்பத்துநாள் பிரம்மோத்சவத்தின் போது, தி. தி. தேவஸ்தான தர்ம பிரசார பரிஷத ஆதரவில் புராணச் சொற்பொழிவுகளும் சங்கீர்த்தனங்களும் இன்னிசைக் கச்சேரிகளும திருமலையில் மிகச் சிறப்பாக நடைபெறும.

இத்தன்மைத்தான சிறப்பும், பெருமையும கொண்ட பிரம்மோத்சவத்தினைத தனக்கே கொண்டு, அருளாட்சி புரிந்து வரும் ஏழுமலையான் கோயில் கொண்டிருக்கும இப்புனிதமான, இயற்கையும் ஆன்மீகச் சூழ்நிலையும் கொண்ட இத்திருமலைக்கு வருகை புரிவோரின உள்ளமும் உடலும ஒருங்கே மேன்மையுறும என்பதில சிறிதும் ஐயமில்லை.

—உமாராம்.




நம் பாரத நாட்டில் எத்தனையோ உற்சவங்கள் - விழாக்கள் கொண்டா டப்படுகின்றன. அவற்றிற்கெல்லாம் மகுடமாக விளங்குவது தீ பா வ ளி எனப்படும் தீ போ ற ச வ மா கு ம். ஆனுல் இந்தத் தீபோற்சவம் எப்பொ ழுதிலிருந்து நம் நாட்டில் கொண்டா டப்படுகிறது? எதற்காகக் கொண் டாடப்படுகிறது என்பதைப் பற்றிய விவரங்கள் எதுவும் சொல்லாது நம் சரித்திர ஏடுகள் மௌனம் சாதிககின்றன. ஆனுல் இவ்விழா வைப் பற்றிய குறிப்புக்கள் அவற் றில் ஆங்காங்கே விரவிக்கிடக்கத் தான் செய்கின்றன.

தீபாவளிக்கு மறுநாள் அதாவது கார்த்திகை அமாவாசைக்கு அடுத்த நாள் பிரதமை. அன்றுதான் விக்கிர மாதித்யன் தன் விக்ரம சகாப்தத் தைத் தொடங்கியதாக நம் சரித்திர ஏடுகள் எல்லாம் செப்புகின்றன. நம் நாட்டுக்கு வந்து போன பிரபல முஸ் லிம் யாத்ரீகரான அல்பருனியின் புத் தகத்திலும் தீபாவளியைப்பற்றிப்பின் கணட விதம் குறிப்பொன்று காணப் படுகிறது.

*"பாரதத்தில் ஹிந்துக்கள் காரத் திகை அமாவாசையன்று தீபம் ஏற்றி பூஜை செய்து விழாக் கொண்டாடு கிருர்கள். அன்று தங்கள் வீடுகளை நன்கு சுத்தம் செய்து வரிசை வரிசை யாக தீபம் ஏற்றி அலங்காரம் செய் கிருர்கள். வாஸுதேவனின் பத்னி யான லக்ஷ்மிதேவி, அன்று இரவு தன் கணவனை விட்டுப் பிரிந்து, ராஜா பலியை விடுவிக்கும பொருட்டு பூமிக்கு வருவதாக ஹிநதுக்கள் நம்பு கிருர்கள்"*— இன்றும் வடநாட்டார் தீபாவளிப் பண்டிகையை ஸ்ரீலக்ஷ் மியை வரவேற்கும் முகமாகத்தான் கொண்டாடி வருகிருர்கள்.

நம் நாட்டுக்கு வெளியே வேறுபல அநநிய நாடுகளிலும தீபாவளிப் பண் டிகை கொண்டாடப்படுகிறது. இவ் விதம் தீபாவளி கொண்டாடும் அந் நிய நாடுகளில் முதன்மை பெற்று விளங்குவது "சயாம்" எனப்படும் "தாய்லாந்து" நாடாகும். அங்கே இப்பண்டிகையை "லோயிகுந்தகம்" அதாவது "இலைகளால் ஆன விளக்கு களை மிதக்கவிடும் (குந்தகம் = இலை யாலான விளக்கு; குந்தகம் =மிதக்க விடுதல்) விழா" எனச் சொல்லு கிருர்கள்.

இரவு நேரத்தில் அவரவர் இருப் பிடத்திற்கு அருகே உள்ள நதி அல் லது நீர்நிலை அருகே புத்தாடை உடுத்தி ஊர் பொதுமக்கள் அனைவ ரும் ஒன்று கூடுவர். இலையாலான தொன்னைகளில் நெய் அல்லது என் ணெய் வார்த்துத் திரியிட்டு தீபம் ஏற்றி அத்தீபத்தை அழகிய இளம் யுவதிகள் நீரில் மிதக்கவிடுவார்கள். அதே சமயம் சிறுவர் சிறுமியர் பட் டாசு, மத்தாப்பு, வாணங்களைக் கொளுத்தி மகிழ்ச்சி ஆரவாரம் செய் வார்கள்: பெரியோர் இதைப்பார்த்து மகிழ்வர்.

அமைதியான இரவு நேரத்தில் நீர்நிலைகளிலும், நதி தீரங்களிலும், லக்ஷக்கணக்கில் இவ்விதம் தீபங்களை மிதக்கவிட்டுதாய்லாந்தியர் இத்தீபா

வளி கொண்டாடுவது பார்க்கப் போரானந்தமாக இருக்கும். வருண பூஜையையே அவர்கள் இவ்வாறு தீபாவளியாகக் கொண்டாடுகிறார்கள். தீபாவளியின போது தாய்லாந்தின் வருணபூஜையும் இந்தியாவின் லக்ஷ்மி பூஜையும் ஒன்றே எனப் பலர் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

வருணன் முதலில் ஒரு அசுரன் என்றும், அவன் கடற்பகுதியில் செல்லுபவர்களை ஹிம்சைப்படுத்தி வந்ததாகவும், இதையறிநத தேவேநதிரன் அவன் கர்வத்தை அடககி ஒடுக்கியதாகவும் நம் இதிகாஸ புராணங்கள் கூறுகின்றன.

மகரிஷி காஸ்யபரின புத்திரர்களும், தேவர்களும, அரக்கர்களும் ஒன்று சேர்ந்து வருணனுக்குச் சொந்தமான பாற்கடலைக் கடைநது, அதிலிருந்து பதினான்கு இரத்தினங்களை வெளிப்படுத்தியதாகவும், ஸ்ரீலக்ஷ்மி தேவியும் அதிலிருநது வெளியானதாகவும் நம் புராணங்கள் மேலும் உறுதிபடககூறுகின்றன.

இப்போதைய பாரசீகக் கடலே பாற்கடல் என்பது. அப்பகுதியே முற்காலத்தில் வருணன் ராஜ்யம். அசுராகள் (அஸ்ஸூரிய மக்கள்), தேவர்கள் (பாபிலோனியர்) காஸ்யபர் புத்திரர்கள் (காஸ்பியன கடலைச் சுறறி வாழ்பவர்கள்) எல்லோருக்கும கடல்மார்க்கம்பாரசீகக் கடலேயாகும் அதை மககள் உபயோகிக்க வருணன் தடை செயது தொந்தரவு கொடுத்ததால் அவர்கள் எலலோரும் ஒன்று திரணடு கடற்போா நடத்தி வருணனை வென்றார்கள.

அவனை எதிர்த்து வந்த மூன்று நாட்டுப் படைகளுக்கும் தலைமை தாஙகிய தேவேநதிரனுக்கு, அககாலத்து வழக்கப்படி தன மகளான ஸ்ரீ லக்ஷ்மி தேவியை வருணன் மணம் முடித்துக் கொடுத்து சமரசம் செய்து கொண்டான். தேவேந்திரனும் விஷ்ணுவும் ஒன்றே என்பதற்குப் பல ஆதாரங்கள் உண்டு எனச் சில ஆராய்சசியாளர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

பாணஸூரனுக்கு உஷா என்ற பெண் ஒருத்தி இருந்ததாகவும், அவள் தன் கனவில் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் பேரன் அனிருத்தனை (பிரத்யும்னன் மகன்) கணடு காதல் கொண்டதாகவும், சித்ரலேகா என்னும் அவள் தோழி அனிருத்தனை தேடிக்கொண்டு பிடித்து அவனை அபகரிததுச் சென்று உஷாவிடம் சேர்ப்பித்ததாகவும், இதை அறிநத ஸ்ரீ கிருஷ்ண பகவான், பாணசுரன் நாட்டின மீது படை எடுத்து அவனை வென்று உஷாவையும் அனிருந்தனையும் அழைத்துக் கொணடு துவாரகை திரும்பியதாகவும் பாரதக் கதை கூறுகிறது.

இவ்விதம் பாணசுரன் தலைநகரான சோனிதபுரியிலிருந்து உஷாவையும் அனிருத்தனையும் அழைத்துக் கொண்டு துவாரகை திரும்பும் வழியில், பாணசுரனின் மந்திரியான குமாண்டன் "மகாப் பிரபு! அமிர்தம் போன்ற பால்தரும் பாணசுரனின் பசுககளை வருணன கவர்ந்து சென்றிருக்கிறான்" என ஸ்ரீகிருஷ்ண பகவானிடம் கூற உடனே அவர் வருணனின் ராஜ்யத்திறகுள் பிரவேசிததார்.

அப்பசுக்கள் கடற்கரையில் உல்லாசமாக மேய்ந்து கொண்டிருந்தன. அவற்றைக் கைப்பறற சென்றபோது, அவை வருணன் அரணமனைக்கு ஓடிவிட்டன. வருணனையும அவன் படைகளையும கடல் பக்கம விரட்டியடித்து அப்பசுககளை மீட்டார் எனவும் பாரதம் மேலும் விரிவாகக கூறுகிறது.

பாணசுரனின் தலைநகரான சோனிதபுரி—துவாரகைக்கு மேற்கே 11,000 யோஜனை தூரத்தில் இருநதது என்பது குறிபபு. மேற்கு திக்கு பாலகன் வருணன் என்றும் நம் கதைகள் மேலும் செப்புகின்றன. சோனிதபுரியிலிருந்து துவாரகை திருமபும் வழியில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் வருணன் ராஜ்யத்தில் பிரவேசித்தார் எனப்படுவதால், துவாரகைக்கும்—சோனிதபுரிக்கும் இடையே "வருணன் ராஜ்யம்" இருந்தது எனபதாகிறது. தவிர, புகழ்பெற்ற புதைபொருள் ஆராய்ச்சிநிபுணர் டாக்டர் அமிர்த பாண்டியா — இப்பொழுது வட ஈராககில் தோண்டி ஆராயப்பட்டு வரும் "நிநவே" நகரம்தான பழங்கால "சோனிதபுரி" எனக கூறுகிறார்.

இப்பொழுது ஈராக்கில் பாயும் டைகிரிஸ் நதியின் மேல்பள்ளத்தாக்கில் "அஸ்ஸிரியா" என்றொரு ராஜ்யம் கி.மு. 3000க்கு முனபாகவே இருநது வநதது என்றும் அதறகு தெறகே — அதாவது இப்போதைய பாரசீகக் கடலுக்கு வடக்கே அதையொட்டினாற்போல்—அக்காலத்தில் "ஈழம்" என மற்றொரு ராஜ்யம் இருந்தது. அஸ்ஸிரியாவை ஒட்டினாற்போல் யூப்ரடிஸ், டைகிரிஸ் கரையில் பாபிலோனியாவும் மேற்கே எகிப்தும் இருநதன. இது மேல்நாட்டு சரித்திராசிரியர்கள் தரும் தகவல்கள்.

கி மு. 3000 வாககில், அஸ்ஸிரியர்கள் தங்கள் பக்கத்து நாடுகளை வென்று முதல் அஸ்ஸிரிய சாம்ராஜ்யமொன்றை ஏற்படுத்தினா. இவவிதம் அவர்கள் சாம்ராஜ்யம் அக்காலத்தில் மேறகே ஏஜியன் கடல் சஹாரா பாலைவனம தொடங்கி கிழக்கே பெர்ஸியாவில் உள்ள "ஆரராத் மலை" வரை பரவிககிடநதது. பிறகு சிறிது காலம் வரை அவர்கள் ஆட்சிக்கு உட்பட்டநாடுகள் விடுதலை பெற்றன.

பிறகு மீணடும அந்நாடுகளை வென்று, இரணடாவது சாம்ராஜ்யம் ஒனறை ஏறபடுத்தினர். அக்காலத்தில் ஆணட அஸூர சக்கரவர்த்தி

களுள் மிகப் பிரபலமானவன் அஸுர் -நாஸிர்-பால் (கி.மு. 884-860) என்பவனாகும். இதன் பிறகு அசுரர்களின் மூன்றாவது சாம்ராஜ்யம ஒன்று கி.மு 745 தொடங்கி கி.மு. 606 வரை இருந்தது. அக்காலத்தில ஆண்ட பிரபலமான அசுர சக்கரவர்த்திகள் மூன்றாவது திக்லாத் பிலிசர், சரகன, சின்ன செரீப், ஈசராதன, அசுரர்-பாணி-பால் ஆகியோர் குறிப்பிடத்தககவர்களாகும.

மூன்றாவது சாம்ராஜ்ய காலத்தில் அஸிரியர்கள் வெனறு தங்கள் நாட்டோடு இணைத்துக்கொணட பெரிய ராஜயம் பாபிலோனியாவாகும். கி. மு. 689ல் செனனசெரீப், அந்நாட்டை வென்று அதன் தலைநகரை தரைமட்டமாக்கினான். கி.மு.670ல் எகிப்தை ஈசராதனும், 722-ல் இஸரேலை சரகனும் வென்றனர். 646-ல் அசுரன்பாணிபால், ஈழத்தைவென்று அதன தலைநகரான சூஸாவை தரைமட்டமாக்கினான. ஆனால், அவன் ஆட்சிககுப் பிறகு 625-ல் பாபிலோன் விடுதலை பெற்றது.

மற்ற நாடுகளும் புரட்சிக்கொடி உயர்த்தி 606-ல் அசுர சாமராஜயத்தின தலைநகரான நிநவேயை அழித்து தீக்கிரையாக்கி விட்டனர். இவ் விவரங்கள் எலலாம் அப்பகுதிகளில் நீண்ட நாட்களாக நடத்தப்பட்டு வரும பல ஆராய்ச்சிகள் மூலம் தெரியவந்துள்ளன. முன்கால அஸிரியாவே அஸுரர் நாடு. அந்நாட்டு மக்களே "அஸுரர்" என்பதைப் பல ஆராய்ச்சியாளாகள ஒப்புகின்றனர்.

மேலும், அஸிரிய மனனர்கள் ஒவ்வொருவரும் தங்கள் பெயர் முன் "அஸுர்" என்ற பட்டம் வகிதது வந்துள்ளனர் அஸுர் — என்றால், அக்காலத்தில் அந்நாட்டு மொழியில பரிசுத்தவான், தயாளன் எனப் பொருள் என்று புதைபொருள் ஆராய்ச்சி நிபுணர் டாக்டர் டி. ஏ. மெகன்ஸி கூறுகிறார். இதே கருத்தை நம் நாட்டில் டாக்டர் கே. ராஜ் வாடேயும் தெரிவிக்கிறார். நம் வேதங்களில் வரும அஸுர் என்ற வார்த்தைக்குப் பொருள்—பரிசுத்தவான, புத்திமான், பலவான் என்பதே எனக கூறுகிறார்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வாழ்ந்த காலம் இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எனப் பாரதம் கூறுகிறது. அசுரர் முதல் சாம்ராஜ்யம் கி மு. 3000 வாக்கில் — அதாவது இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முனபு இருந்தது என மேல் நாட்டு ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அசுர் பாணி பால் என்ற நான்கு மன்னர்கள் அசுரவம்சததில் ஆண்டுள்ளனர் எனவும் அவர்கள் கூறுகிறார்கள்.

"அஸுர்" எனபதும் "பால்" என்பதும் அவ்வம்சத்தினருக்கான பொதுப்பட்டங்களாகும். ஆகையால் "பாணி" என்பதே பெயர். அஸுர் பாணி பால் என்பதே பாணாசுரன். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா காலத்தில் அதாவது முதலாவது அசுர சாம்ராஜ்ய காலத்தில் இருந்தவன் முதலாவது பாணாசுரன். மூன்றாவது சாம்ராஜ்ய காலத்தில் — அதாவது 646-ல் இருந்தவன் நான்காவது பாணாசுரன் எனக் கருத இடமிருக்கிறது.

வருணன் - அசுரன்; அவன் நாடும் இந்தியாவல்ல. நம் வேதங்களே இதை மிகத் தெளிவாகக் கூறுகின்றன. உதாரணத்துக்கு—ருக்வேதத்தில கீழ்ககண்ட ஸ்லோகங்களைக குறிப்பிடலாம்.

> இமா மூஷவா ஸுரஸ்ய ஷ்ருதஸ்ய
> மாயா வருணஸ்ய ப்ரபோசம்
>
> (ருக். 5-85-5)
>
> மித்ரா வருணா! யாவர்ஷயதோ
> அஸுரஸ்ய மாயயா
>
> (ருக். 5-63-3)

மகாபாரதத்திலிருந்து —வருணன் நாடு துவாரகாபுரிக்கும் பாணாஸுரன் நாட்டுக்கும் இடைப்பட்டது எனவும், கடலோரமாக உள்ளது எனவும் தெரிகிறது. முன் காலத்தில் தெற்கு ஈராக்கில் பாரசீகக் கடலையொட்டி "ஈழம்" என்றவொரு ராஜ்யம் இருந்ததாகவும் அதன் தலைநகர் "ஸுஸா" என்றும், அஸுரர் சாம்ராஜ்யத்திற்கு அடிக்கடி இந்த ஈழம் அடிமைப்பட்டுக் கிடந்தது என்றும் புதைப் பொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

தவிர, நம் மச்ச புராணம் — வருணன் நாட்டின் தலைநகர் "ஸுஷா" எனக்கூறுகிறது. இதிலிருந்து ஆராய்ச்சியாளர்கூறும் ஈழமே வருண தேசம்; பாரசீகக் கடலே "பாற் கடல்" என தெளிய முடிகிறது. ஆகையால் வருணத் தனயாவான "ஸ்ரீ லக்ஷ்மி தேவியின் பிறந்தகம்" முன்பு வருண தேசமாக விளங்கிய "தெற்கு ஈராக்கே" என யூகிக்கவும் முடிகிறது.

நம சேர, சோழ, பாண்டியர் மூவரும் ஒரே இனத்தவர், ஒரே மொழி பேசுவர் என்றாலும் தனித்தனி ராஜ்யங்களாக ஒருவரோடு ஒருவர் போரிட்டு, ஒருவர் நாட்டை மற்றவர் அடிமைப்படுத்தி வாழ்ந்தது போல், அஸுரிய மக்களும் ஈழம் எனப்பட்ட வருணநாட்டு மக்களும் ஒரே இனத்தவர் என்றாலும் போரிட்டு வாழ்ந்திருக்கலாம்.

இதிலிருந்து ஸயாமியர் — வருண பூஜை உருவில் கொண்டாடும் தீபாவளிக்கும் — வடநாட்டார் வருணத் தனயாவான ஸ்ரீ மகாலக்ஷ்மியைப் போற்றும் உருவில் கொண்டாடும் தீபாவளிக்கும் — தமிழ் நாட்டார் நரகாசுர வதத்தின நினைவாகக் கொண்டாடும் தீபாவளிககும் ஒரு வித ஒருமைப்பாடு இருப்பதை எளிதில் காணலாம்.





ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸவாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாககப்படும் பூஜைக்கு உரிய சாதனஙகள.**

| வ.எண். | யந்திரங்களின பெயரும் அதன பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) $6\frac{1}{4}\times6\frac{1}{4}$ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆணடுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூனறு யநதிரஙகள் சேர்த்து வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தை உணடுபண்ணும் | 1750-00 |
| 6. | சாவ ஜன மன தன ஆகாஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரா, ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்நது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீககி எதிரிகள் இல்லாமல் செய்யவும பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம தரவல்லது. | 1750-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ.(கோல்டுபிரேம்)மேற்கண்டபலனைத் தரவல்லது | 500-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சிததியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருநது பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர், அம்பாள் கடாட்சமும், பொருள வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெணகள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உணடாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலா. தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச செய்யவல்லது | 70-00 |
| 16. | கண திருஷ்டி படம் (கோலடு பிரேம) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண திருஷ்டி தொலலைகளை நீக்கி விபததுக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும தொல்லைகளை நீககிக காப்பாற்ற வலலது | 150-00 |
| 18. | தத்தாதரேயர், விக்ன கணபதி, ம்ருத்யஞ்யம (சாவ ஜெய யநத்ரம்) 8×24 செ.மீ. இநத மூனறு யந்திரங்கள் சேரதது ஆகாயத்தில் செல்லும் விமானம் முதல லாரி கார் வரை கண் திருஷடியால் ஏற்படும் விபத்தைத் தவிர்க்கவல்லது. | 500-00 |
| 19. | இனனும் பலவிதமான டாலர்கள், மாலைகள் அனைத்தும சுத்த வெள்ளியால் செய்யப்பட்டன. | |

கோவிலில்களுக்கு வேணடிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுககு 25% அதிகம. விலைபட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விணணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான பத்திரிகைகளில் தெரிவிகக முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸடேட் பேஙக் எதிரில), கோபாலபுரம், சென்னை - 600086.

**போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254**


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

# சங்ககால வேங்கடம்

(வட வேங்கடம்)

பகுதி — 1

வடவேங்கடம தெனகுமரி
ஆயிடைத்
தமிழ கூறும நல்லுலகம

என்பது 'தமிழ் கூறும் நலலுல கத்தை' இனங்காட்டும தொலகாப் பியத்திறகுப் பனம்பாரனர் இயற்றிய சிறப்புப் பாயிரப் பகுதி. ஈணடு 'தென குமரி' என்பது 'குமரியாறு' கடல் கோள் கொணடது எனபது நச்சினா கினியரின விளககம். ஆனல் 'வட வேங்கடம்' என்பது என்ன? இதைப்பற்றிச சிநதிப்பதே இக்கட்டுரையின நோககம். இதறகுச் சங்க இலககியங்களில் வரும் வேங் கடத்தைப்பற்றிய குறிபபுகளை வைத்து ஆராயின் உணமையொளி தட்டுப்படும்.



**சங்க இலக்கியக் குறிப்புகள் :**

சஙக இலக்கியஙகளில் பத்துப பாட்டில பட்டினபபாலை சிறுபா ணுற்றுப்படை இவற்றில் உளள வேங்கடத்தைப்பறறிய குறிப்புகளை யும, எட்டுததொகையில அகநா னூறு, புறநானூறு, குறுநதொகை போனற நூலகளில் உளள வேங கடத்தைப்பறறிய குறிபபுகளையும வைத்து ஆராயநதால சங்க இலககி யஙகளில காணப்பெறும வருணனை கள், இன்று நாம திருவேங்கடத்தில் காணும் காட்சிகட்கு முறறிலும வேறுபட்டனவாக இருப்பதைக்காண லாம. புறப்பொருள வெணபாமாலை யிலுமசஙகமருவிய நூலாகியசிலப்பதி காரத்திலும வேஙகடத்தைப்பறறிய பல குறிப்புகள் காணப்பெறுகினறன.

கணணனர் பாடியுள்ள அகப்பாட லில் 'வேங்கட நெடு வரை' எனற தொடா காணப்பெறுகின்றது. இச் சொறறொடா 'நீணடமலைத் தொடா' எனற பொருளில வரு கினறது. தலைமகன் பிரிவினல வேறு பட்ட தலைமகளைத தோழி வறபுறுத திக கூறியதாக அமைந்தது இப பாடல். இதில் வேஙகடததைப்பறறி வரும் பகுதி இது:

"சாரல்
ஈனறு நாள உலநத மெனனடை
மடப்பிடி
கன்றுபசி களைஇய பைஙகண் யானை
முற்ற மூங்கில் முளைதரு பூட்டும
வெனவேல திரையன வேஙகட நெடு
வரை
நனளுட பூதத நாகின வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞரை
நனைபபசுங் குருந்தின நாறு சினை
யிருந்து
துணைப்பயிாந தகவும் துணைதரு
தான் கார்
வருதும யாம எனத தேற்றிவ்
பருவம் காண; அது பாயின்றல்
மழையே"

—அகம் : 85

பேராசிரியர். டாக்டர். ந. சுப்புரெட்டியார்
சென்னை-46.

(உலந்த - கழிந்த; பிடி - பெண் யானை: யானை - களிறு; தருபு-கொணர்ந்து; நாகு இள-மிக இளைய; வீ-பூக்கள், மஞ்ஞை-மயில்; நனை-தேனையுடைய; நாறு சினை-நறுமணம வீசுமகிளை: பயிர்ந்து-அழைத்து; அக வும்-கூப்பிடும, துனைதரு-விரைந்து வரும்; தண்-குளிர்ந்த, பாயின்று-வரா நின்றது.)

ஈன்று அணிமை கழிந்த மெல்லிய நடைவாய்ந்த பெண் யானையும் அதன் கன்றும் பசியால் வாடுகின்றன. இப்பசியைப் போக்குவதற்குப் பசிய கண்ணினையுடைய ஆண் யானை மூங்கிலின் முற்றாத முளையினைக் கொண்டு உணபிக்கும் இத்தகைய மலைச்சாரலை யுடையது. திரையனது வேங்கட மலை, அந்த நெடுவரையில் நல்ல நாட்காலையில் மலர்ந்த வேங்கை மரத்தின் நறிய பூக்களின்று கள் அளைந்து தேனையுடைய பசிய குருந்தமரத்தின நறுமணம் வீசும் கிளையிலிருந்து கொண்டு பொறிவரி மஞ்ஞை தன் துணையை அகவி அழைக்கும். இது நடைபெறுவது குளிர்ந்த கார்ப்பருவம். இதுதான் தலைவன் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற பருவம். அதற்கேற்றவாறு மழையும பரவி நிற்கின்றது. இதனைக் காணபாயாக" என்று கூறித் தலைவியைத் தேற்றுகின்றுள தோழி.

நக்கீரர்பெருமான் தம பாடலில் இந்த மலையை 'நெடுவரைப்பிறங்கிய வேங்கட வைப்பு' என்று குறிப்பிடுவர். இவா பிரிவிடை ஆற்றுள எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்ததாகப் பாடியுள்ளார். பொருள வயிற் பிரிந்த தலைவன் சென்ற சுர நெறியைக் குறிப்பிடுங் கால வேங்கடமலைபற்றிய குறிப்பு வருகின்றது.

பல்பொறிப
புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாண் மலர் உதிரக்
கலைபாய்ந்து உகளும கவைசேர் வேங்கைத
தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய
வேஙகட வைப்பிற் சுரன இறந்தோரே
(அகம்-141)

(பொறி-புள்ளிகள; புலிக்கேழ்-புலியின் நிறம்; நரந்தம்-நாரத்தை மரம்; நாள் மலர்-புதிய பூக்கள்; கலை-முசுக்கனி; உகளும்-தாவும; தேம கமழ்-தேன நாறும; பிறங்கிய-விளங்கிய; வேங்கட வைப்பு-வேங்கடமலை; சுரன் இறந்தோர்-சுர நெறியைக் கடந்து சென்றோர்).

என்ற பாடற பகுதியில் இக்குறிப்பினைக் காணலாம். வேங்கை மரத்தின் பூக்கள் பல புள்ளிகளையுடைய புலியின் நிறத்தையொப்பக் கீழே உதிர்ந்து கிடக்கின்றன. வேங்கை மரஙகளின் இடையே நாரத்தை மரங்களும் காணப்பெறுகின்றன. இவற்றினிடைய முசுக்கனிகள் பாய்ந்து தாவுவதால் நாரத்தையின் புதிய மலர்கள் உதிர்கின்றன. இத்தகைய சூழநிலையும் தேன நாறும் இடங்களையும் கொண்டது வேங்கட வைப்பு என்று நமக்குக் காட்டுவர் நக்கீரர் பெருமான்.

மாமூலனார் என்ற செந்நாப்புலவர் "கோடுயர் பிறங்கல் குன்று பல நீந்தி தேன தூங்கு உயர்வரை நன்னாட்டு உம்பா வேங்கடம்" என்று வேங்கடத்தைக் காட்டுவர். இவர் பாடல 'பொருள் தேடுமபொருட்டு வேற்றுப் புலம் அடைந்த தலைவன விரைந்து திரும்பிவிடுவான என்று கூறித் தலைவனது பிரிவால் வருந்தும் தலைவியைத் தோழி தேற்றுவதாக' அமைந்துள்ளது.

'கோடுயா பிறஙகல குனறு பல நீந்தி
வேறு புலம படர்நத விினைதரல் உளளத்து
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய
இதைச் சுவற கலித்த ஈரிலை நெடுந் தோட்டுக
கவைக கதிர் வரகின் கால்தகு பொய கழி
கவட்டடிப் பொருத பலசினை உதிர்வை
அகன்கட் பாறைச் செவ்வயிற றெறீஇ
வரியணை பணைத்தோள் வார்செவித தன்னையர்
பண்ணை வெண்பழத் தரிசி ஏய்ப்பச
சுழலமரஞ் சொலித்த சுழகலை வெண காழ
தொடிமாண உலக்கை ஊழிற போக்கி
உரல் முகம் காட்டிய சுரை நிறை கொளளை
ஆஙகண் இருஞ்சுனை நீரோடு முகவாக்
கழிபடு குழிசிக் கல்லடுப் பேற்றி
இணாததை கடுக்கை ஈண்டிய தாதிற
குடவர் புழுக்கிய பொங்கவிழ்ப் புனகம
மதாவை நல்லான் பாலொடு பகுக்கும
நிரைபல குழீஇங் நெடுமொழிப புலலி
தேன தூங்கு உயிர்வரை நனனாட்டு உம்பர்
வேஙகடம் இறந்தனா ஆயினும ஆண்டவா
நீடலா"

(அகம-393)

(கோடு-சிகரம், பிறங்கல்-பாறை, புலம-நாடு; ஆறு-வழி; வம்பலர்-புதியா; காய் பசி-மிக்க பசி; இதை சுவல்-புதுக் கொல்லை; கலித்த-தழைத்த; கவர்த்த அடி-பிளவுபட்ட குளம்பு; தெறீஇ - குவித்து; வாா செவி-நீண்ட செவி; தன்னையர்-தாய்மார்; பண்ணை-ஒருவகைக்கீரை; வெண்காழ்-வெள்ளிய அரிசி; ஊழில் போக்கி-முறையாகச் செலுத்தி, சுரை-உரலின் குழி; கழிபடு-மணலை செய்த; குழிசி-பானை; இணர்-கொத்து, கடுக்கை-கொன்றை; குடவா-இடையர்; புனகம-சோறு; பகுக்கும-அளிக்கும; நெடுமொழி-மிக்க புகழையுடைய; தேன் தூஙகு-தேன இறால தொஙகும; உமபா-அப்பாற பட்ட; இறந்தனர்-கடந்து சென்றனா! ஆணடு-ஆங்கண, நீடலர்-தாழ்நதிருபபாா அல்லா)

இதில் பொருள்தேடும பொருட்டுச சென்ற தலைவன் புலலி என்பானது நாட்டைக கடந்து சென்றான் என்று குறிப்பிடும மாமூலனார் புல்லி ஆண்ட நாட்டைபபற்றிக் கூறுகின்றார். சிகரம் உயர்ந்த பாறைகளையுடைய மலைகள் பலவற்றைக் கடந்து

செல்லுகின்றான் தலைவன். வழியில காடு திருத்திய மேட்டு நிலமாகிய புதுக் கொல்லையில வரகின் கதிர்கள் தட்டைகளுடன் கொய்து குவிக்கப் பெற்றுள்ளன அவற்றுள் ஒரு பகுதியின் மீது மாடுகளைவிட்டு துவைக்கப் பெற்றதால உதிர்ந்த வரகு மணிகள் அகன்ற பாறையின்மீது செவ்விய இடத்தில குவிக்கப்பெற்றுள்ளன. அந்த வரகினைத் தாய்மார்கள உரலில் போட்டுத் தீட்டி அரிசியைச் சுளகினால் புடைத்துப் பிரிக்கின்றனர். அந்த அரிசியை மண பானையில் பெய்து கற்களை அடுக்கி அமைத்த அடுப்பினமீது அப்பானையை ஏற்றிச் சோறாக்கி அச்சோற்றை நல்ல பசும் பாலுடன் கூட்டி வழங்குவர். அதற்கேற்றவாறு அந்நாட்டில் கறவைப் பசுக்கள்மலிந்துகாணப்பெறுகின்றன. அங்குள்ள மலைகளின இடுக்குகளில் தேன் கூடுகள் தொங்குகின்றன. இத்தகைய நாட்டைக் கடந்து தலைவன் சென்றனனாயினும் அங்கிருந்து திரும்புவதில் காலம் தாழ்த்தமாட்டான் என்று குறிப்பிடுகின்றார் புலவர் பெருமான்.

கல்லாடனார் என்ற சங்கப்புலவரும வேங்கடமலையைக 'காமபுடை நெடுவரை' என்று குறிப்பிடுவர். இதுவும் 'யாதோ ஒரு நிமித்தத்தின பொருட்டுத் தலைவன பிரிவுற்றதனால் வேறுபட்ட தலைமகளைத் தோழி தேற்றுவதாக' அமைந்த பாடலாகும. இப்பாடலில் தலைவன பிரிந்து சென்ற இடத்தைக் குறிப்பிடும.

**அவரே**

"மாஅல யானை மறபபோரிாப புல்லி
காமபுடை நெடுவரை வேங்கடத்து உமபா
அறையிறந்த தகன்றனர் ஆயினும நிறையிறந்து
உள்ளா ராதலோ அரிதே"

(அகம். 209)

(அவர்-தலைவர்; மால்-பெரிய காம்பு-மூங்கில்; நெடுவரை-நீண்ட சாரல்; அறை-குன்றுகள்; இறந்து-கடந்து; உள்ளார்-நினையார்.)

என்ற பகுதியில் வேங்கடமலை குறிப்பிடப்பெற்றுள்ளதைக் காணலாம்.

**ஆய்வு :**

இனி, இந்த நான்கு சங்கப்புலவர்களும கையாண்டுள்ள வேங்கடம் பற்றிய சொற்றொடர்களைச் சிந்தித்து ஆய்வோம். பிற்கால இலக்கியம போலன்றி சங்க இலக்கியத்தில் அதிகமான கற்பனையின்றிக் கவிஞர்கள் இயற்கையை வருணித்திருப்பர் என்பதை நாம் அறிவோம். வரம்பிகந்து உயர்வு நவிற்சியாகக் கூறப்பெறும் இடங்களைச் சங்கப் பாடல்களில் யாங்கனும் காணடல் அரிது என்பதும் நாம் அறிந்ததேயாகும். மேலே குறிப்பிட்ட நான்கு பாடல்களிலும், சாதாரணமாகக் கவிஞர்களிடம் காணப்பெறும கற்பனைகூட இல்லை. மலைகளைக் கடந்து செல்லல் மட்டிலும் 'குன்றுபல நீந்தி' என்று கற்பனை நயம் தோன்றக கூறப்பெற்றுள்ளதேயன்றி, பிற செய்திகள் உள்ளது உள்ளவாறே இயம்பப்பெற்றிருத்தலைக் காணலாம் ஈண்டு 'வரை' என்பது 'கோடு' அல்லது 'வரம்பு' என்று பொருள்படும சொல்லாகும். இச்சொல்லுக்கு 'மலை' என்ற பொதுப் பொருளும் பொருந்தலாம். ஆயினும 'வரை' 'நெடுவரை', 'நெடுவரைப் பிறங்கிய வேங்கட வைப்பு' என்ற சொல், சொற்றொடர்களைக் கூர்ந்து நோக்குங்கால் இவற்றால் குறிக்கப்பெறுவது 'மலை' என்ற பொதுப் பொருள் மட்டும அன்று என்பதும, அது குறிப்பிட்ட ஒரு வகையைச் சேர்ந்த மலைத் தொடர்களாகக் குறிப்பிடுகின்றன என்பதும புலனாகும. 'நெடுவரை' என்பது 'குன்று' அல்லது 'குன்றம' என்பதனின்றும் பெரிதும் வேறுபட்டது. பிற்கால இலக்கியங்கள் இச்சொற்களைக் குழமபிய நிலையில் தாறுமாறாகக் கையாண்டமையால் இன்றைய வழக்கில் அவை 'ஒரு பொருட் பன்மொழிகளாக' வழங்கி வருகின்றன. எ-டு 'சிங்கவேள் குன்றம்' என்று திருமங்கை மன்னன கையாண்டிருப்பதைக் காண்க. ஒன்றோடொன்று ஒழுங்கற்ற நெருங்கிய நிலையில் இன்று நாம் காணும திருப்பதி மலையைக் 'குன்றம' அல்லது 'குன்று' என்று கூறலாம். வேண்டுமானால் 'மலை' என்ற பொதுப் பெயராகச் சொல்லிவைக்கலாம. ஆயின், எவ்வாற்றானும் அதை 'நெடுவரை' என்று சொல்லுவதற்கில்லை. இதனால்தான் மகாகவி பாரதியார் 'மாலவன் குன்றம்' என்று கூறினார்போலும்!

மேற்கூறிய வருணனை விவரங்களைக் கைவிட்டாலும், திருப்பதி மலையை 'வடவேங்கடம்' என்று இனம் கண்டு கொள்வதில் மேலும் ஓர் இடர்ப்பாடு உண்டாகின்றது. தமிழகத்தின் வட கிழக்கு மூலையிலுள்ள ஒரு சிறிய இடத்தை அதன் இருகடல்கட்கும இடையே நீண்டு கிடக்கும நிலப்பகுதியின வட எல்லையாகக் கூறுதல் யாங்ஙனம் பொருந்தும்? இதனைப் பேராசிரியர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள், இங்ஙனம் கூறுவதன் பொருந்தாமையை முன்னரே நன்கு உணர்ந்து தம்முடைய நூலில (A History of Tirupati vol. I) இங்ஙனம் கூறுவர்: தமிழர்களின் தலைசிறந்த இலக்கணமாகத் திகழ்வது தொல்காப்பியம் ஆகும். இது காலத்தால் மிகவும் முற்பட்ட நூல் இதில் தமிழகத்தின் எல்லை கூறப்பெற்றுள்ளது. இதில் வட எல்லையாக வேங்கடமும் தென் எல்லையாகக் குமரியும் கூறப்பெற்றுள்ளன. (இக்கட்டுரையின் தொடக்கத்தில் காட்டப்பெற்றுள்ள நூற்பாப்பகுதி). அக்காலத்தில் மேற்கிலும் கிழக்கிலும கடல்களே தமிழகத்தின எல்லைகளாக அமைந்திருந்தன. ஆகவே, 'வடவேங்கடம' என்று அடிக்கடிக் கூறுவதே ஒரு மரபாகிவிட்டது. இதைத் தெளிவாக உணர வேண்டுமாயின், வேங்கடத்தைப்பற்றி இலக்கியங்களில் குறிப்பிடப்பெறும் இடங்களைக் கூர்ந்து நோக்கிப் பொருள் காணடல் வேண்டும். ஒருவர் வடக்கிலுள்ள வேங்கடத்தைக் கடந்து சென்றால் அப்பகுதிகளில் மக்கள்

பேசும் மொழி முற்றிலும் வேறுபட்டிருக்கும் என்ற போக்கிலேயே அவ்விடங்கள் குறிப்பிடப்பெற்றிருப்பதை அறியலாம். சங்க இலக்கியங்களில் "மொழி பெயர் தேஎம" (எ. டு. குறுந. 11; ஐங்குறு-321: அகம்-67 முதலியவை காண்க) என்ற தொடர் எங்கணும் பெருவழக்காக ஆளப்பெற்றிருப்பதினின்றும் இதனைத் தெளியலாம். ஆகவே, அக்காலத்தில் தமிழர்கட்கு நன்கு பழக்கமுடைய திருப்பதி மலையையே 'வேங்கடம்' என்ற பெயரால் குறித்தனர் என்று கருதலாம். இது நாளடைவில் கிட்டத்தட்ட ஓர் எல்லைக்குறியாகவே (Land Mark) அமைந்துவிட்டது. இதனைக் கடந்து அப்பால் சென்றால் அங்கு மக்களிடம் தமிழ் பேச்சு வழக்கில் இல்லாததை அறியலாம்." (A History of Tirupati vol.I பக் 4,5) பிறிதோர் இடத்தில் அப்பேராசிரியர் தமது இதே நூலில் "வட எல்லையின் மிக முக்கியமான எல்லைக்குறியாக இருப்பது 'வேங்கடம்' என்பது ஐயமில்லை. (மேற்படி நூல் பக். 7) என்பதாகக் கூறியிருப்பதும் சிந்திக்கத்தக்கது.

**பேராசிரியர் அய்யங்கார் அவர்களின் தவறான ஊகம் :**

பேராசிரியர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் மேற் குறிப்பிட்ட வேங்கடத்தின் வருணனையைச் சங்க காலத்து வேங்கடத்தைக் குறிப்பதாகவே கொண்டுள்ளார்கள். ஆயினும் அவர்,

"தழா அது
உருமெனச் சிலைக்கும்
ஊக்கமொடு பைங்கால்
வரிமான் நோன் ஞாண் வன்சிலைக்
கொளீஇ
அருநிறத் தழுந்திய அம்பினர் பலருடன்
அண்ணல் யானை வெண்கோடு
கொண்டு
நறவுநொடை நெல்லின் நாண்மகிழ்
அயரும்
கழல் புனை திருந்தடிக் கள்வர்
கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ அரிதே முன்னது
முழவுறழ் திணிதோள் நெடுவேளாவி
பொன்னுடை நெடுநகர் பொதினி
அன்னநின்
ஒண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூண் ஆகம் பொருந்துதல்
மறந்தே"
(அகம்-61)

(சிலைக்கும்-ஒலிக்கும், நோன்ஞாண் வலிய நாண்; சிலை-வில்; அருநிறம்-அரிய மார்பு; கோடு-கொம்பு; நறவு-கள், அயரும்-சிறப்புச் செய்யும், விழ்வு-திருவிழா, முன்னது-மிகப் பழமை வாய்ந்த; முழவு உறழ்-முழவினை யொத்த; பொதினி-பழநி; ஒண்கேழ்-ஒளி விளங்கும்; ஆகம்-மார்பு, பழகுவராதல்-பயின்று தங்குதல்) என்ற பகுதியிலுள்ள 'விழவுடை விழுச்சீர் வேங்கடம்' என்ற சொற்றொடரை அடிப்படையாகக்கொண்டு ஆண்டு முழுவதும் சமய சம்பந்தமான விழாக்கள் மலிந்தது வேங்கடம் என்று கூறுவர். இதனால் அங்கு திருக்கோயில் இருந்தமை பெறப்படுகின்றது என்றும், அதனை மையமாகக் கொண்டு விழாக்கள் நடைபெற்றிருத்தல் வேண்டும் என்றும் ஊகம் செய்ய வழி அமைகிறதாகச் செப்புவர். ஆனாலும், இதனைக் கொண்டு கோயிலின் இருப்பைக் கொள்வதற்குச் சிறந்த ஆதாரம் ஆகாது என்பதனையும் ஒப்புக்கொள்வர்". (5.மேற்படி நூல்-பக். 4)

(தொடரும்)

# ஸ்ரீ ராமாயணத்தில் பரத சரணாகதி
## (ஒரு கண்ணோட்டம்)

(காஞ்சிபுரம் காட்டில் தோன்றி சென்னை மற்றும் நாட்டில் பல பகுதிகளிலும் பல்லாயிரக்கணக்கான உபந்யாஸங்களை நிகழ்த்திப் பெயர்பெற்றவர் ஸ்ரீ. உ. வே. வித்வான் வேங்கடாசாரியார் ஸ்வாமி. இந்த ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவசியம் 'அறிய வேண்டிய அர்த்தங்கள்' என்று கூறப்பெறும் அர்த்த பஞ்சகத்தை உள்ளத்தில்கொண்டு 'ஸ்ரீராமாயண ஸாரம்' என்ற நூலை இயற்றியுள்ளார்.

இந்நூலிலிருந்து பரத சரணாகதியைப் பற்றி மிக அழகாக தனக்கே உரிய பாணியில் எழுதியுள்ளதை நம் வாசகர்கள் படித்துப்பயனடைய அதனைக் கீழே எழுதியுள்ளேன்.

"இச்சேதனன் எம்பெருமானை உபாயமாய் பற்றும்போது, இவன் பற்றும் அப்பற்றுதல் அவ்வெம்பெருமான் திருவுள்ளத்தைப் பின் சென்றிருக்க வேண்டும் என்பதும் சரணாகதியை பற்றிய ஓர் உண்மையாகும். இவ்வுண்மையைப்பரதன்வரலாற்றில் நாம்அறியலாம். 'கூனியின் கூற்றினால் கலங்கிய கைகேயி பரதனுக்குப் பட்டத்தையும் இராமபிரான் வனவாஸத்தையும் சக்கரவர்த்தியிடம் வேண்ட, அச்சக்கரவர்த்தியும் ஸத்யத்திற்கு கட்டுப்பட்டு அளிக்க, இராமபிரானும் வனம் செல்ல, அதனால் சக்கரவர்த்தி துஞ்ச, கேகய தேசத்தினின்றும் அயோத்தி வந்த பரதன் இவ்வரலாறுகளை அறிந்து, சக்கரவர்த்திக்குச் செய்யவேண்டியசடங்குகளைச் செய்து முடித்து, சித்திரகூடம் சென்று இராமபிரான் திருவடித் தாமரைகளை உபாயமாகப் பற்றி 'இப்போதே திருவயோத்திக்கு எழுந்தருளி முடி சூடிக் கொள்ளுதல் வேண்டும்' என்று அங்கு இராமனை ஆர்த்தியுடன் வேண்டின இடத்தும் அப்பிரான் அதற்கு இசையாது இருக்க, அத்தருணம் அவன் திருவடி நிலைகளை அருள, அவற்றைப் பெரும்பேறாகப்பெற்று திரும்பி நந்திகிராமம் வந்து அத்திருவடி நிலைகளுக்கு அபிஷேகம்செய்து, அவற்றுக்குபரதந்திரனாய்ப திநான்கு ஆண்டுகள் பரம புருஷன் வரவை எதிர்பார்த்துக் காலம் கழித்துக் கொண்டிருந்தனன் பரதன்' என்பதே அப்பரதன் வரலாறாகும்.

இவ்வரலாற்றைக் காணுங்கால், 'இராமபிரான் திருஅயோத்திக்கு எழுந்தருளி முடிசூடிக்கொள்ளுதல்' பயன் என்பதும் 'அப்பயனுக்கு அவன் திருவடிகளே' உபாயம் என்பதும் பரதன் எண்ணத்தில் கண்டு விளங்குகின்றன அல்லவா?

இங்கு வால்மீகி பகவான் இவ்வரலாற்றைச்கூறுங்கால் 'அபிஷிஞ்சஸ்வத்யைவ' என்றும் 'ஏவமுக்த்வா மஹாபாஷ்ப: ஸபாஷ்ப கைகயாஸுத: ராமஸ்ய சிரஸா பாதௌ ஜக்ராஹ விதிவத்புந:' என்று கூறியிருப்பது காணத்தக்கது.

மேற்கூறிய வார்த்தைகளுள், 'அத்யைவ அபிஷிஞ்சஸ்வ' என்னும் பகுதியில் பரதன் விரும்பும் காலத்திலேயே முடிசூடிக்கொள்ளுதல் அப்பரதன் விரும்பிய பயன் என்பதும் 'ஸபாஷ்ப' என்பதில் 'பரதன் ஆர்த்தியுடையவன்' என்பதும், 'ராமஸ்ய சிரஸா பாதௌ ஜக்ராஹ' என்னும் பகுதியில் 'பரதன் இராமபிரானுடைய திருவடிகளை உபாயமாய் பற்றியவன்' என்பதும் 'விதிவத்' என்பதில் 'அப்பரதன் அங்ஙனம் பற்றும்போது, முறையுடன் பற்றியவன்' என்பதும் விளங்குகின்றன அல்லவா?

ஆகவே 'பரதன் ஆர்த்தியுடன் முறைப்படி சரணம் பற்றியவன்' என்பது தெளிவு. 'ஆர்த்தியுடன் சரணம் பற்றியவனுக்கு அப்போதே பயனுண்டாம்' என்று சாஸ்திரம் கூறுகின்றது. அவ்வாறு அப்பரதன் பயன் பெற்றவனா? என்னில் பெறவில்லை என்றே வால்மீகி முனிவன் கூறியிருக்கின்றான். "ஸகாமம் அநவாப்யைவராம பாதாவுபஸ்ப்ருசன் நந்திக்ராமே அகரோத் ராஜ்ய ராமாகமந காங்க்ஷய" என்னும் வால்மீகி முனிவனின்வார்த்தைஇங்குக்காணத்தக்கது. இங்கு, பரதன் முறைப்படி பற்றியிருந்தும் பயனைப்பெறாததற்குக் காரணம் யாதோ? எனின் இதற்கு பரிஹாரமாய் சிலர் கூறும் கருத்துக்களைக் கூறுவோம்.

1. முன்பு செய்த தேவதைகளின் சரணாகதிக்கு முதலில் பயனை அருள் செய்து, பின்பு செய்த பரத சரணாகதிக்கு பின்பு பயன் அருள்புரிதல் முறை எனத்திருவுள்ளங்கொண்டு பரதன் விருப்பத்திற்கு ஏற்ப, அப்போதே ராமபிரான் அயோதிக்கு எழுந்தருளி முடிசூடிக்கொள்ளவில்லை. இதுமுதல் பரிஹாரம்.

தேவர்களும் பரதனும் தத்தமக்கு உரியபயனை ஒரே காலத்தில் பெற விரும்பி பரமனை வேண்டிக்கொண்டதாகக்கூற பற்றிலது. ஆனால் பரதனோ 'இப்போதே முடிசூட்டிக் கொள்ள வேண்டும்'என்றுகாலத்தைக்குறித்தே சரணம் பற்றியிருக்கிறான் அன்றோ?

திரு. எஸ். கே. ராமானுஜாசாரி B.A.,LT.
சென்னை—32.

இதனால் பரதன் விருப்பத்திற்கு ஏற்ப அப்போதே, முந்தி முடிசூடி, அப்பரதன்தாபத்தைப்போக்கி,பிந்தி தேவதைகள் விரும்பியவாறு, இராவணனை அழிக்க, ஏதோஒன்றை வியாஜமாய்க் கொண்டு இராமபிரான் வனத்திற்கு எழுந்தருளலாமன்றோ? ஆதலின் முதல் பரிஹாரம் ஏற்கத்தக்கதன்று.

2. இராமபிரான் திருவுள்ளம் புண்படுமாறு பரதனுக்குச் சில பாவங்கள் இருக்கக்கூடும். பயனின்மையைக் கண்கூடாகக் காணகின்றமையின் அங்ஙனம் சில பாவங்கள் இருக்கக்கூடும என்று ஊஹிக்கலாமல்லவா? இவ்வாறு கூறுவது இரண்டாம் பரிஹாரம்.

பரதன் திருவவதார உணமையை உணரின, இராமபிரான் எங்ஙனம் இருப்பவனோ, அங்ஙனமே அப்பரதனும் பாவமின்றி இருத்தலின, அப்பரதனுக்கு இராமபிரான் திருவுள்ளம் புண்படுமாறு சில பாவங்கள் உண்டு என்று கூறுதற்கு இடமில்லை. இதனால் இரண்டாம் பரிஹாரமும் பொருத்தமுடையதன்று என்பது தெளிவு.

3. இச்சரணாகதிக்குச் சில அஙகங்கள் உண்டு. பெரியோரை முன்னிடுதல், பெரிய பிராட்டியாரை முனனிடுதல் போல்வன அவ்அங்கங்களாகும். பரதன் பயன பெறாததறகுக் காரணம், அவ்வஙகங்களுள், ஏதோ ஒன றிரணடு மறைந்திருக்கலாம். இது மூனறும் பரிஹாரம்.

'ராமஸய சிரஸாபாதௌ ஜக்ராஹ விதி வத்புந ' என்பதில் உள்ள 'விதி வத்' என்னும் சொலலை நோக்கின் 'எம்பெருமானை உபாயமாய்ப் பற்றுங்கால் முறை வழுவாது பற்றியவன பரதன்' என்பது தெள்ளிதின் விளங்குகினறதன்றோ? ஆதலின் மூன்றும் பரிஹாரத்திற்கும் இடம் இன்று.

4. இராமபிரான், தந்தை, தாய் இவரை பூஜித்தல் இன்றியமையாததாம் என்னும் முறையைத் தன் செயலில் நடத்திக் காட்டி நிலை நிறுத்த வந்தவன். 'தன் தாய்' என்றும் 'வேற்றுத்தாய்' என்றும் வேற்றுமை சிறிதுமில்லாதவன். கைகேயிவேற்றுத் தாயாயிருப்பினும், அத்தாய் சொல்லின்பின் சென்று முடியையும் துறந்த பரம புருஷனன்றோ? அவன். அப்பெருமான் அவ்வாறு பூசித்த கைகேயியைப் பரதன் பல வகையால் வெறுத்துப் பேசியது அவன் திருவுள்ளததை மிகவும் புண்படுத்தியது. ஆதலின அவன் பரதன் விருப்பத்துக் கேற்ப இரஙகினன் இல்லை. 'மாதரம் ரக்ஷ கைகேயீம்' என்னும் இராமபிரான் வார்த்தையும் 'பூஜிகாமாமி கரமாத' என்னும் பரதன் வார்த்தையும் இங்குக் காணத்தக்கன. இது நான்காம் பரிஹாரம்.

நான்காம் பரிஹாரம் இராமாயணத்தில் ஒருவாறு கூறப்பெற்றுள்ளது உண்மையே ஆயினும் அதை பரிஹாரமாய் எடுத்துக கொள்வதற்கு இல்லை.

இப்பரிஹாரததை முக்கியமாய் நம் ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றவில்லை. பரதனும் இலக்குமணன் போல் இராம பக்தி பெற்றவனன்றோ? விபரீத செயல் உடைய கைகேயினிடம் அப்பரதனுக்கு மனம் பொருநதுமோ? அவன் தாயை வெறுத்தது சாஸ்த்ரமுறையைக் காணுங்கால் குற்றமாமோ? பரமனிடம் வெறுப்புள்ள தாயை அறவே விட்டு விடுவது சாஸ்திரத்தின் உணமை கருத்தன்றோஇவவுணமைக்கருத்தைக் காணுஙகால் நான்காம் பரிஹாரமும் பரிஹாரமாகாது என்பது தெளிவாம்.

பரதன் இராமபிரானை முறையுடன் பற்றியிருந்தும் அப்பற்றுதல், அந்த இராமபிரான திருவுள்ளத்திற்குப் பாங்காயிராமையின், பயனற்றதாம் என்று கொள்ள வேண்டும். இப்பொருளை தேசிகன் திருவாக்காலே அனுபவிப்போம்.

" रामे राज्यं पितुरभिमतं सम्मतं च प्रजानाम् माता वव्रे तदिह भरते सत्यवादी ददौ च । चिन्तातीतः समजनि तदा पादुकाग्र्याभिषेकः दुर्विज्ञानस्वहृदयमहो दैवभक्त प्रमाणम् ।"

ராமே ராஜ்யம் பிதுரபிமதம்
ஸம்மதம்ச
ப்ரஜாநாம் மாதா வவ்ரேததிஹ பரதே
ஸத்யவாதி ததௌச சிந்தாதீத:
ஸமஜநி ததா பாதுகாகரியாபிஷேக:
துர்விஜ் ஞாநஸவருஹ்தய
மஹோ தைவ மத்ர பரமாணம் ||

இதன் கருத்து. 'தசரத சக்கரவர்த்தி இராமபிரானுக்கு முடிசூட்டி இராச்சிய பாரத்தை அப்பரம புருஷனிடத்தில் வைக்க விரும்பினான். அச்சக்கரவர்த்தியின் கொள்கையை மக்கள்அனைவரும் ஒரு முகமாக விரும்பினார்கள. அச்சக்கரவர்த்தியின் மஹஷியான கைகேயி,பரதனுககு முடிசூட்டி இராச்சிய பாரததை அவனிடம வைக்க வரம் கேட்டாள். ஸத்யவாதியான சககரவர்த்தியும் அங்ஙனம அளித்தான். ஆனால் சக்கரவர்த்தி கோரியவாறு இராமபிரானுக்கும, கைகேயி கோரியவாறு பரதனுக்கும் திருஅபிஷேகம் நடைபெறாது, ஒருவரும் ஒருகாலும் எண்ணாதிருக்க திருவடி நிலைகளுக்கு திருஅபிஷேகம நன்கு நடநதது. இதற்குக் காரணம் எம்பெருமானுடைய ஸங்கல்பமேயாம்.'

இததிருவாககில் சக்கரவர்த்திக்கும் மக்களுக்கும் இராமபிரானுடைய திருவபிஷேகம் எங்ஙனம் இஷ்டமோ அங்ஙனமே பரதனுக்கும் இஷ்டம. அது தைவமாகிய இராமபிரானுககுத் திருவுள்ளமில்லாமையால உணடாகவில்லை.

இத்திருவாககையும் இதன் கருத்தையும் அனுபவிப்போர்க்கு 'இராமபிரான் திருவுள்ளமில்லை. அதனால் பரதன் கோரியது நிறைவேறவில்லை' என்பது நன்கு விளங்கும்.



# வெண்மதியம் தாவென்னும் வேங்கடம்

புகைப்படக் கருவியானது வைக்கப்படும் இடத்தைப் பொறுத்தே கவர்ச்சியான கோணங்கள் அமையும். பார்க்கும் காட்சிகள் சிறப்பாகத் தெரியும்.

அதுபோல் மானுட இனம் அமரும் இடத்தைப்பொறுத்தே புலனின்பங்களால் உண்டாகும் மோகத்தை உணர முடியும். உணர்ந்து பாபத்தை நீக்க முடியும். பாபம் நீங்கும் பொழுது ஆத்ம தத்துவ ஞானத்தில் பற்று ஏற்பட முடியும்.

'தெளிந்த பாறையின் மேலிருக்கிறது ஒரு பெண் குரங்கு. அது அன்போடு ஆண் குரங்கை நோக்கி, விளங்கிய சந்திரனைப் பிடித்துக் கொடு என்று கேட்கும் வேங்கடம்' என்று வேங்கடத்தின் மகிமையினைப் பற்றிக் கூறுகிறார் பேயாழ்வார்.

''தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி, —விளங்கிய
வெண்மதியம் தாவெனனும் வேங்கடமே''

*(மூன்றாம் திருவந்தாதி–58)*

வேம்+கடம்=வேங்கடம். வேங்கடம் என்றால் பாபங்களைக் கடத்துமிடம் என்று பொருள். தெளிந்த சிலாதலம் என்ற சொற்கள்–தெளிவான, உறுதியுடன் கூடிய மனநிலையைக் குறிக்கும். மந்தி–பெண்ணையும், கடுவன்–ஆண் மகனையும் குறிக்கும். சூரியனிடமிருந்து ஒளியைப் பெறும் சந்திரன், ஆத்மாவிலிருந்து பெறும் ஞானத்தைக் குறிக்கும்.

'காமக் கடும் புனலில் குள்ளக் குளிரக் குடைந்து நீராடும், பருவமுடைய இளந் தம்பதியர், வேங்கடத்தின் மகிமையால் அந்தக் காதலிக்குத் தெளிந்த உறுதியான மனநிலை ஏற்பட்டுவிடுகிறது. காதலனிடம் ஆத்ம ஞானத்தை சுட்டிக் காட்டி 'அதை நான் வாழ்வில் கடைப்பிடிக்க நீ உதவி செய்' என்று கேட்பதாகக் குறிப்புணர்த்துகிறார் பேயாழ்வார்.

வாழ்வில் சாந்திக்கும் வளத்திற்கும் ஆன்மீக முன்னேற்றத்திற்கும் ஆதாரமாகப்பெண்ணினம் இருக்கும் பொழுதே, அவர்களது நிலை சமுதாயத்தில் உயர்த்தப்படும். ஹைஹீல்சும் கோபுரக் கொண்டையும் அவர்களின் நிலையை உயர்த்திவிடாது.

காதலின் சக்தி ஆழமானது குணம், மனப் பக்குவம், திறமைகள், அறநெறி, அறிவுத்துறை மற்றும் உழைக்கும் ஆற்றல் முவலியவற்றைப் பொறுத்து அது இருக்கும். அத்தகைய பண்புப் பயிர்களை ஆணுக்கு உருவாக்கும் நாற்றாங்கால் அழகும் ஆழமும் வலிமையும் ஒருங்கே அமைந்த பெண்களின் கண்களே என்று கூறினால், அது மிகையில்லை. 'காதல் செய்யும் மனைவியே சக்தி கண்டீர். கடவுள் நிலை அவளாலே எய்தல் வேணடும்' என்று கூறுவார் மகா கவி பாரதி.

காமம் மலரைக் காட்டிலும் மென்மையானது. அது பரிசுத்தமான அன்பினால் வெளிப்படுவது. சிலர்தான் அந்த பரிசுத்தமான அன்பில் ஈடுபடுவார்கள். அப்படி ஈடுபட்ட காதலி தன் காதலனுக்கு ஆத்ம ஞானத்தைச் சுட்டிக் காட்டியதற்குக் காரணம் அந்த வேங்கடத்தின் மகிமையே யாகும்என்று கூறுகிறார் பேயாழ்வார். உடற் காமத்தைப் பகவத் காமமாக மாற்றுமிடம் வேங்கடமாகும்.

பசுவின் உடல் முழுவதுமுள்ள ரத்தத்தில் பால் சத்து கலந்திருக்கிறது. ஆனால் அதன் காம்பின் வழியாகக் கறக்கும் பொழுது பால்மட்டும் வருகிறது. ரத்தம் வரவில்லை. அது போல் திரிவிக்கிரம அவதாரமெடுத்த பகவான் உலக முழுதுமுள்ள எல்லாப் பொருள்களிலும் கலநது இருக்கிறான். இருப்பினும் எல்லார்க்கும் மேலான எம் தலைவனாகிய அப்பெருமான் எழுந்தருளியுள்ள திருவேங்கட மலையை நாம் வணங்கும்பொழுதே நம் வினைகளெல்லாம் போய்விடும் என்கிறார் ஞானி நம்மாழ்வார்.

'' ..................................
அன்று ஞாலம் அளந்த பிரான்* பரன்
சென்று சேர் திருவேங்கடமாமலை*
ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே''

*(திருவாய்மொழி—3-3-8)*

---

**ஸ்ரீவில்லிபுத்தூர் திரு ஏ. ஸ்ரீராமுலுதேசிகன்.**
புதுச்செந்நல்குளம்.

---

'ஆணவத்தை அகற்றும் அரு மருந்தே வேங்கடவன்' என்று ஒரு யானை வேங்கடவனை வழிபாடு செய்வதின் மூலம் குறிப்புணர்த்துகிறார் பேயாழ்வார்.

வாய் கொப்பளித்துக் கை கால்களை நீரால் கழுவிய அடியாாகள் மலர்களை எடுத்து வேங்கடவனை வழிபாடுசெய்யப்போனதைப் பார்த்தது, திருமலையிலுள்ள ஓர் யானை. உடனே தானும் ஈடுபட்டது அச்செயலில். வாய் கொப்பளித்தது-தன் கன்னத்திலிருந்தும் மத்தகத்திலிருந்தும் பெருகியொழுகும் மத நீரால். கால் கழுவியது - அருவிபோல் கால் வரை பெருகி வழியும் அதே மத நீரால். அவனைப் பூசனை செய்தது தேன் மிகுந்த மலரால். மிடுக்கான அந்த வேங்கடவனை வணங்கியது தன் துதிக்

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்க டேஸவரா கோயிலில நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப் படும் கட்டணத் தொகையினை தேசியமாககப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும, நிர்வாகச சிக்கலும் மேலாணமைககு ஏற்படுகின்றது என்ப தைத் தெரிவிதது்க் கொள்கின்றோம்.

கையால எனறு கூறுகிறார் பேயாழ் வார்.

"புகு மதத்தால் வாய்பூசிக் கீழ்
தாழந்து, அருவி
உகுமதததால் கால் கழுவிககையால்,
—மிகுமதத்தேன
விண்ட மலர் கொணடு விறல, வேங்
கடவனையே
கணடு வணங்குமகளிறு".

— (மூன்றாந் திருவந்தாதி 70)

'அழுவன், தொழுவன், ஆடிக் காணபன்' என்ற ஞானி நம்மாழ்வா ரின் செயலைக் கடைப்பிடித்து, அந்த யானை கன்ன மதம், கரட மதம், கபோல மதம் என்ற மும்மதச் செருக கினை அடியோடு நீகக, வேஙகடவனைக கண்டு வணஙகியது. அதுபோல் கல்வி மதம, தன மதம், குல மதம் எனற மும்மதச் செருக்கினை வளர்த் துக் கொணட அறிவுடைய ஆனமா, அவற்றை அடியோடு நீக்குவதற்கு வேங்கடவனுடைய கல்யாண குணங் களைப் பாடி, மனம உருகி அழுது தொழுது அவனைக் கணடு வணங்க வேண்டுமெனறு கூறுகிறார் பேயாழ் வார்.

வேங்கடத்தினுடைய மகிமையினை குரஙகுகள வாயிலாகவும், ஆண வத்தை அகறறும அருமருந்தாம் வேங்கடவனை ஒரு யானை வாயிலாக வும் கண்டோம். தெளிவடைந்தோம். வாழ்வில் கடைப்பிடிக்க, ஆத்ம ஞானம பெற்று மும்மதச் செருக் கினை நீக்க, வண் புகழ் நாரணன், திணகழல் சேருவதறகு, 'நின்றவா நில்லா நெஞசினையுடைய' அறிவு டைய ஆன்மா (சேதனன்) என்ன செய்ய முடியும்?

'நீயும் நானும இந நேர் நிற்கில,
மேல மற்றோ
நோயும் சாரகொடான் நெஞசமே
சொன்னேன்"

என்கிறார் நம்மாழ்வார்.

நெஞ்சம் அறிவுடைய ஆன்மா வுடன நினறால்தானே நோய் வராது? இல்லாவிடில் வரத்தானே செய்யும? வராமல் தடுக்க திருமலையில் எழுந் தருளிய வேங்கடவனுககு பூசனைகள் செய்யுங்கள் எனறு கூறுகிறார் பூதத் தாழவார்.

'விடியறகாலத்தினை உணர்ந்து மலை ஊறறுக்களிலுளள மலாகளைக் கொய் துகொணடு வநது வழிபடுகினறன திருமலையிலுள்ளகுரங்குகள். திருவேங் கடவன மலரடிகளை அடைவதறகாக அவைகள் அவனுடைய திருநாமங்களை நுட்பமாக அறிந்து சொல்லுகினறன' என்று அருளிச் செய்கிறார் பூதத்தாழ் வார். நிலையில்லாத மானுட மனத் தைக் குரங்குகளோடு ஒப்பிட்டுக் கூறுகிறார்.

"போதறிந்து வானரஙகள பூஞுனை
புக்கு, ஆஙகலாந்த
போதரிந்து கொண்டு ஏத்துமபோது,
உளளம—போது
மணி வேஙகடவன் மலரடிக்கே
செல்ல,
அணி வேங் கடவன் பே ராய்ந்தது".

(இரணடாந் திருவந்தாதி—72)

நிலையிலலா மன ந் தினை யுடைய மானுட இனம், நிலைத்த மனத்தைப் பெற்று, வேங்கடவனின் திருநாமங் களைப பொருளுணர்ந்து கூறி நிலைத்த மதியைப் பெற்று, வேங்கடத்தின மகிமையால் பூசனை வழிபாடுகளில் ஈடுபடும் என்பது பூதத்தாழ்வாரின் கருத்தாகும்.

பிரகலாதனைக் கருவிலே பெற்றிருக் கும் பொழுது அவன் தாய் நாரத முனியின் ஆசிரமத்திற்குச் சென்று அஷ்டாக்ஷர மந்திரோபதேசம் கேட் டாள். கருவிலே திருவுடையவனுகி தன் தந்தையைத் திருததி விஷ்ணு பதம் அடையச செய்தான் பிரகலா தன. அபிமன்யுவைக் க ரு வி லே பெற்றிருக்கும் பொழுது அவன தாய் வீரர்களுடைய சரிதங்களைக் கேட் டாள. கருவிலே திருவுடையவனுக வளர்ந்து பாரதப்போரில் சிறநது விளங்கி வீர சுவர்கம அடைந்தான அபிமன்யு.

அதுபோல் பெண்கள் தங்கள் கண வன்மார்களுடன் வேங்கடம் செனறு உணமையான பகதியிலீடுபட்டால் அந்த வேங்கடத்தின் மகிமையால், அநத வேங்கடவனின அருளால், பாபஙகள் நீககப்படுவாாகள. ஆத்ம ஞானமடைய, அநதப பெண குரங்கு ஆண குரஙகிடம் கேட்டதைபபோல தங்கள் கணவன்மார்களிடம், 'விளங் கிய வெணமதியம் தா' என்று கேட் பாாகள. கருவிலேயே திருவுடைய மக்களைவளர்பபாாகள, சமுதாயத்தை மேம்பாடடையச் செய்வார்கள்.

ஃ ஃ ஃ

# கலை மகளுக்கோர் தனிக்கோயில்



**'' மண்கண்ட வெண்குடைக் கீழாக**
**மேற்பட்ட மன்னரும் என**
**பண்கண்ட அளவில் பணியச செய்**
**வாய் படைப்போன் முதலாம்**
**விண்கண்ட தெய்வம பலகோடி**
**உண்டேனும் விளம்பில் உனபோல்**
**கண்கணட தெயவம உளதோ சகல**
**கலாவல்லியே''**

எனறு நெல்லை மாவட்டம் ஸ்ரீவை குணடம் என்ற நகரின் வடககிலுள்ள ஸ்ரீகைலாயதநில் சைவ வேளாள, சிவநேசச் செம்மல் சண்முக சிகாமணி கவிராயரையும் சிவகாமி சுநதரி யம்மையாரையும் பெற்றோராகக் கொண்டு, பிறநது ஐந்தாண்டுகள் வரை பேசும் திறனற்று ஊமை போலிருந்து வந்த ஸ்ரீகுமர குருபரர் என்பார், திருச்செந்தூர் முருகனரு ளால் பேசும் திறன் பெற்று, தலயாத் திரை மேற்கொண்டு, துறவறங் கொளளு முன்னர், காசிக்குச்சென்று, டில்லி பாதுஷாவுடன் பேசிப்பழக 'இந்துஸ்தானி' மொழி அறியாமை யால், 'சகலகலா வல்லிமாலை' எனற பிரபந்தத்தை இயறறிக கலைமகளைப் பிரார்த்தித்தார். கலைமகளின் திரு வருளால் இநதுஸ்தானி மொழி சரள மாகவர, பாதுஷாவுடன உரையாடி மகிழ்வித்து, அவரிடம தாம் காசியில் இருப்பதறகாக மடம் அமைக்க, கேதார கட்டத்தில் இடமும் பொரு ளும் அளிக்க வேண்டினர்! முற் சொன்ன பாசுரத்தின் முதல் இரண்டு அடிகளால் 'மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னரும், என் பண்கண்ட அளவில் பணியச் செய் வாய்' என்ற வேண்டுகோளுக் கிணங்கி, கலைவாணியருளால், பாது ஷாவும் இணங்கிப் பொன்னும், பூமி யும் அள்ளிக்கொடுத்தாரெனில், கலை மகளின் கருணைதான் என்னே!

விக்ரம சோழ மன்னனின் அவை யில் தலைமைப் புலவராயிருந்த ஒட்டக் கூத்தர், வரகவி பாடும் வன்மை பெற விரும்பி, கலைமகளைக் குறித்துத் தவம் செய்ய விருப்பமுற்ருர். அதற்கேற்ற இடமாக 'அரிநாதேசுவரம்' என்னும் தலத்தைத தேர்ந்தெடுத்தார். அத் தலத்துக்கு விரைந்து, தக்ஷிண வாகினியாய் (தெனபுறம் நோக்கிப் பாயும்) அரிசிலாற்றில் நீராடி, ஸ்ரீ விநாயகப் பெருமானை வணங்கி, கலை வாணியைக் குறித்து அருந்தவத்தை மேற்கொணடார்.

கலைவாணி தேவியும் மகிழ்வுறறு, ஒட்டக்கூத்தர் முன் தோன்றித் தன் வாயினின்று தாம்பூலத்தை அவர் வாயில் உமிழ்ந்து இன்னருள் பாலித் தனள்! கலைவாணியின் தரிசனம் பெற் றமையாலும், திருவருட்கடாட்ச மகிமையாலும், அருளாசியாலும் பேரறிவு பெருகி, ஞானமும் உண் டாக, ஒட்டக்கூத்தர் அருந்தமிழில் வரகவி பாடும் திறனைப் பெற்று, அள விலாத ஆனந்தமடைந்து, கலைமகளைக் களிப்புடன் போற்றித் துதித்து, "தேவியே! எளியேன் பிரார்த்தனைக் கிணங்கி, இங்கேயே தாங்கள் கோயில் கொண்டு எழுந்தருள வேண்டும்! இங்குத் தங்களைக் காணவரும் யாவருக்கும் விரும்பியவை சித்திக் கும்படியாகக் கருணைக் காட்ட வேண்

'மயூரப்ரியா'

டும்!" என்று வேண்டினர்! அந்த வேண்டுகோள் பிரகாரம் 'அரிநாதேசுவரம்' என்னும் திருத்தலத்தில் ஸ்ரீ சரஸ்வதிதேவி தனிக்கோயில் கொண்டுள்ளார்! இந்த திருத்தலம் தற்போது 'கூத்தனூர்' என்று பெயர் கொண்டுள்ளது.

தஞ்சை மாவட்டம், நன்னிலம் தாலுக்காவில், 'பூந்தோட்டம்' என்னும் கிராமத்துக்கருகில் அமைந்துள்ள 'கூத்தனூர்' என்ற தலத்தில் ஸ்ரீ சரஸ்வதி அம்பாளின் தனிக் கோயில் கிழக்கு நோக்கி அமைந்திருக்கிறது. ஸ்ரீ சரஸ்வதி அம்பாள் ஞான ரூபமானவள், சித்த ரூபிணி, பிரம்மாவின் பத்னி, வித்தைகளுக்கு அதிபதி என்று பிரசித்தம்!

ஒட்டக்கூத்தர் தவமியற்றி அருள் பெற்ற தலமாதலால் 'கூத்தனூர்' என வழங்கலாயிற்று. கூத்தாடும் விநாயகர் அருள் வழங்கியதை முன்னிட்டும் 'கூத்தனூர்' என ஆயிற்று என்பர். எப்படியிருப்பினும், எங்கும் காணாத வகையில் அன்னை கலைவாணி தனிக் கோயில் கொண்டிருப்பது ஒரு மிகவும் விசேஷமான, அபூர்வமான அம்சமாகும்!



நடனமாடும் சரஸ்வதி
ஹோய் சாளேஸ்வரர் கோயில், ஹளபீடு.

இயற்கையழகு விளங்கும் 'கூத்தனூர்' கிராமத்தில, ஈசானயத்தில் சிவாலயமும், மத்தியில் விஷ்ணு ஆலயமும, தெற்கில் சரஸ்வதிக்குத் தனிக்கோயிலும் அமைந்துள்ளன! ஒரே கிராமத்தில் அருகருகே மூன்று கோயில்கள்! இன்னும் சொல்லப் போனல், ஒரே கிராமத்தில் ஸ்ரீ துர்க்கை, ஸ்ரீ லக்ஷ்மி, ஸ்ரீ சரஸ்வதி- ஆகிய தேவிமார்கள் கோயில் கொண்டுள்ளார்களெனில், மிகையாகாதே! மற்றும் இக்கிராமத்தின் மேற்கில் ஸ்ரீ ஐயனரும் பாலசாஸ்தாவாகக் கையில் மலர்ச் செண்டுடன் வீற்றிருந்து அருள் பாலிக்கிறர்! பற்பல குடும்பங்களுக்கு அவர்தான் குலதெய்வம்!

ஸ்ரீ துர்க்காதேவி, கலைவாணியிடம திருஞான சம்பந்தரின் கதையைக் கூறும்படிச் சொல்லிப் பின்னா அங்கேயே வீற்றிருக்கும்படிக் கேட்டுக் கொணடதாலும், பிரம்மதேவன் ஸ்ரீ விநாயகப் பெருமானையும் பரமேஸ்வரனையும் வழிபட்டதால், ஸ்ரீ கலைவாணியும் அங்கேயே கோயில் கொண்டுவிட்டதாகவும் கூறுவர்!

ஸ்ரீ சரஸ்வதி தேவியானவள் தவக் கோலம் பூண்டு, வெள்ளைத் தாமரையில் பத்மாஸனமாய் அமர்ந்திருக்கின்றள். மேல் வலக்கரத்தில் ஜபமாலையும், கீழ்வலக்கையில் சின் முத்திரை, இடது மேல் கையில் கெண்டியும், இடதுகீழ்க் கரத்தில் புஸ்தகமும் கொண்டு, திருவருள் பாலிப்பதை இன்றைக்கும்-என்றைக்குமே வைத்த கண் வாங்காமல் தரிசித்துக் கொண்டேயிருக்கலாம் போலிருக்கிறதே!

வஸந்த நவராத்திரியில், சுமார் ஒரு மாத காலம் ஸ்ரீ சரஸ்வதி அம்பாளுக்கு லட்சார்ச்சனை கிரமமாக நடந்து வருவது ஒரு சிறப்பாகும்! வெள்ளிக் கிழமைகளில் சந்தனக்காப்பும், செவ்வாய்க் கிழமைகளில் மஞ்சள் காப்பும், லட்சார்ச்சனை பூர்த்தி தினத்தில் பகலில் மகாஅபிஷேகமும், இரவில் நவசகதி அாச்சனையும் அம்பாளின் வீதியுலாக் காட்சியும் கண் கொள்ளாக் காட்சிகளாவது ஓர் விசேஷமே!

ஈசானிய சிவன் கோவிலில் ஸ்ரீ ஹரிநாதேஸ்வரரும், மத்தியில் ஸ்ரீலக்ஷ்மி நாராயணப் பெருமானும் அருகருகே கோயில்கொண்டு கடாட்சிப்பது ஒரு தனிப்பெருஞ்சிறப்பாகும்! நவராத்திரியில் ஸ்ரீ சரஸவதி பூஜை தினத்தில் மட்டும் சரஸ்வதி அம்பாளின் பாதங்களுக்குப் பக்தர்களே அர்ச்சனை செய்ய வாய்ப்பளித்துள்ளார்கள்! இன்னும் என்ன வேண்டும்? நவராத்திரி விழாவின் இறுதியில் மேள தாளத்துடன், வாண வேடிக்கைகளுடன, புஷ்பப் பல்லக்கில் அம்பாளின் புறப்பாடும் உண்டு!

இத்திருக்கோயிலுக்கு விஷு வருஷம் சித்திரை மாதம் 20ம் தேதி, வெள்ளிக்கிழமை (1941ம் ஆண்டில்) அன்று கும்பாபிஷேகம் நடைபெற்றதென்றுஅறிகிறோம். இதற்கு ஸ்ரீகாமகோடி பீடாதிபதி ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் வருகை தந்தது சிரேஷ்ட்டமான வைபவமாகும்! கோயில் வாசலில் படிக்கல்லாயிருந்துவந்ததைப் பெயர்த்தெடுத்து அதனை அக்கோயிலிலேயே பத்திரப்படுத்தி வைத்துள்ளார்கள். அக்கல்லில், கல்வி அறிவேயில்லாத ஸ்ரீ புருஷோத்தமன் என்போன் - குடந்தையைச் சேர்ந்தவன்-மனம் வருந்தி, ஸ்ரீ சரஸ்வதி தேவியைக குறிதது கூததனூரில் தவங்கிடந்து கலி 4314ல் விஜயதசமி தினத்தில அம்பாளின திருவருள் கிடைககப் பெற்றதாகக், கூறப்படுகிறது!

கல்லும் சொல்லாதோ கவி? கடிதே ஏகுவீர், கலைவாணியின் அருள் பெறுவீர்.

(8-ஆம் பக்கத் தொடர்ச்சி)

திருவுருவங்கள் சுற்றிலும் அமைந்திருந்தால் அது உத்தம வகுப்பைச் சார்ந்த வீரசயன மூர்த்தியாகும். ஆயுத புருஷர்கள், ருத்திரர்கள், ஆதித்தர்கள், அப்ஸரஸ், சப்தரிஷிகள் ஆகியோர் இடம்பெறு விட்டால் மத்தியம வகுப்பைச் சேர்ந்ததாகும். சனகாதியார், கின்னரர், பிருகு, மார்க்கண்டேயர் ஆகியோரும் இல்லாவிட்டால் அதம வகுப்பைச் சேர்ந்தவராவார்.

4. அபிசாரிக சயனமூர்த்தி :

இரண்டாக வளைந்து சுருண்ட ஆதி சேடனின் மேல் இம்மூர்த்தி பள்ளிக் கொண்டுள்ளார். அனந்தன் இரு தலைகள் மட்டும் பெற்றுள்ளான். தலை சற்றே தூக்கி உயர்ந்துள்ளது. நீலவண்ணரான திருமால் அரவணையில் முழுமையாகப் படுத்தவாறு உறங்கும் கோலத்தில் தோன்றுவார். அவரது முகம் ஒளி குன்றியிருப்பது போல் தோன்றும். கருமை நிற உடைகளை அவர் அணிந்திருப்பார். சுற்றிலும் எந்தப் பரிவாரமும் இல்லை. இவரே உத்தம வகுப்பைச் சேர்ந்தவர். ஆதிசேடன் ஒரு தலையுடனும் ஒரே உடல்வளைவுடனும் தோன்றினால் திருமாலின் உருவம் மத்தியம வகுப்பைச் சேர்ந்ததாகும். அரவணை இன்றி நிலத்தில் திருமால கிடந்தால் அவ்வுருவம் அதம வகுப்பைச் சார்ந்ததாகும்.

வீர, அபிசாரிக வகைகளில் திருமாலின் சயன உருவங்கள் தோன்றுவது அபூர்வம். பிறருக்குத் தீங்கு விளைவிக்கவே அபிசாரிக மூர்த்தியை வழிபடுவதால் அம்மூர்த்திகளை ஊருக்குப் புறத்தேயுள்ள பைசாசபபடை எனும் பகுதியில் கோயில்கொள்ளச் செய்வர். முகத்தில் அருள் இன்றித் தீய நோக்குடன் தோன்றும் அபிசாரிக மூர்த்தியைக் காண்பது அரிது.

ஆலயங்களில் சயனத் திருமேனிகள் :

திருமாலுக்கு உகந்த 108 திருப்பதிகளில் 60 தலங்களில் நின்ற கோலத்திலும், 21 தலங்களில் இருந்த கோலத்திலும், 27 பதிகளில் கிடந்த நிலையிலும் மகாவிஷ்ணு தோற்றமளிக்கிறார். பள்ளி கொண்ட கோலத்தை ஆகமங்கள் நான்கு வகையாகப் பிரித்துள்ள போதிலும் தலங்களுக்கு ஏற்ப சில சிறப்பு சயனக் கோலங்களையும் திருமால் கொண்டுள்ளார்.



மாணிக்கசயனர்-திருநீர்மலை.

உத்தானி சயனம் :

சாரங்கபாணி கோயில, கும்பகோணம்.

கும்பகோணத்தில் சாரங்கபாணியாகத் திருமால் ஒரு பிரம்மாண்டமான கோயிலில் எழுந்தருளியுள்ளார் ஆராவமுதன் திருநாமத்துடன் பள்ளி கொண்டுள்ள இப்பெருமாளை ஏழு ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர். திருமழிசை ஆழ்வார் ஆராவமுதப் பெருமாளை வழிபட இப்பதிக்கு வந்தார். தன்னைக் கவனிக்காமல் திருமால் துயில்வதாக எண்ணி அவருக்கு என்ன களைப்போ? என்ற பொருள் தோன்றுமாறு பாடினார்.

“ நடந்த கால்கள் நொந்தனவோ?<br>
நடுங்கும் ஞாலம் ஏனமாய்<br>
இடந்த மெய்குலுங்கவோ?<br>
விலங்குமால் விடைச்சுரம்<br>
கடந்தகால பரந்த காவிரிக்கரைக்<br>
குடந்தையுடன்<br>
கிடந்தவாறு எழுந்திருந்து பேசு<br>
ஆழிகேசனே ”

இப்பாடலைச் செவிமடுத்த இறைவன் சற்றே தலையைத் தூக்கி ஆழ்வாரை நோக்கினாராம். அரவணையில் பள்ளி கொண்டுள்ள பெருமாள் தலையைச் சற்றே தூக்கிய நிலையில் இன்றும் காட்சியளிக்கிறார். இதனையே உத்தான சயனம் என்று அழைப்பர். பூதேவி, ஸ்ரீதேவி அருகே தோன்றுகின்றனர். நாபிகமலத்தில் நான்முகன் அஞ்சலி செலுத்துகிறார். ஹேமமுனிவர், திருமழிசை ஆழ்வார் சப்தரிஷிகள், புனித நதிகள், வானவர் ஆகியோர் வழிபடுகின்றனர்.

தர்ப்பசயனம் - திருப்புல்லாணி :

இராமேஸ்வரத்திற்கு அருகே யுள்ள திருப்புல்லாணியில் தர்ப்பைப் புற்கள் மீது சயனித்த கோலத்தில் இராமர் சேவை சாதிக்கிறார். வானரப்படைகளுடன் கடலைக்கடப்பதற்கு வழிவிடுமாறு மூன்று நாட்கள் தர்ப்

பைப் புல்லாலான படுக்கையிலிருந்த வாறு சமுத்திரராஜனிடம் இராமர் வேண்டினாராம். பின்னர் இராவண தூதர்கள் முனனிலையில் பாலாழி வண்ணன் கோலத்தில் 33 கோடி தேவர்களுக்கும் தரிசனம் அளித்த தாகத் தலபுராணம் செப்பும். இத் தலத்தில் பட்டாக்கத்தியுடன் வீர சயனராகத் திருமால் காட்சியளிக் கிறார். உநதியிலிருந்து எழுநது மேற் செல்லும் கமலம் மூன்று தண்டுகளைக் கொண்டது. நடுக்காம்பில் நான் முகனும், மற்றிரண்டில் கிரீடம் அணிந்த சந்திரசூரியர்களும் அமர்ந் துள்ளனர். மேற்சுவரில் மது, கைட பர்கள், கௌஸ்துபம், திருமகள், சுந்தோபசுந்தர்கள் ஆகியோரின் உரு வங்கள் உள்ளன. மூலவரின் திரு முடியருகே கருடர், மார்க்கணடேயர் ஆகியோரும் திருவடியருகே இராவ ணனின் தூதர்களான சுகன், சார ணன் ஆகியோரும், பிருகு முனிவரும் வீர ஆஞசனேயரும் காட்சியளிக்கின் றனர்.

## கோபியரின் பக்திப் பிரேமை

ருக்மணியும், சத்யபாமாவும் 'தாம் அருகில் இருக்கும்போது பக வான் கிருஷ்ணன ஏன பிருந்தாவன கோபியர்களை நாடிச் செல்கிறார், தனக்குக் கோபியர்கள் நிகராகுமா' என்று கருதத் தொடங்கினார்கள்.

உண்மையான பக்தர் யார் என்பதை உணர்த்த ஒரு தடவை பகவான் ஸ்ரீ கிருஷ்ணன தலைவலியால் துடிப்பதுபோல் பாவனை செய்தார். தேவலோக மருந்துகள் எதுவும பயன்படவில்லை. வழி தெரியாது ருக மணியும சத்யபாமாவும் திகைத்தனர். நாரதர் இத்துன்பததை போக்க வழி யாது என்று பகவானிடம் விணணப்பித்தார்.

உண்மையான பக்தன் ஒருவனின் பாத தூளியைத தலையில் தேய்த் தால் தலைவலி போகுமென பகவானே வழி சொன்னார்.

பகவானின் தலையில் தங்கள் பாதத்தூளியை (பாத தூசியை) போடுவது எத்தனை பாவம். அதைச் செய்தால் நரகத்துக்கல்லவா போக வேண்டும் என்று நாரதரும், ருக்மணி, சத்யபாமாவும் அஞ்சி தயங்கி நின்றனர்.

அப்போது பகவான் நாரதரை பிருந்தாவனத்துக்கு அனுப்பி யாரா வது பக்தர்கள் இருந்தால் பார்த்து அவர்கள் பாத தூளியை வாங்கி வரச் சொல்லி அனுப்பினார்.

நாரதர் பிருந்தாவனம் வந்து சேர்நதார். கண்ணனின் தலைவலி பற்றி கேட்டதுமே கோபிகையர் துடிதுடித்தனா. பகவான் நோய்க்கு மருந்து பகதன் ஒருவனின பாததூளி என்று தெரிந்ததும், அத்தனை கோபிகைகளும் தத்தம் பாதங்களில் ஒட்டியுள்ள பாததூளிகளைச்சேகரிக்கத் தொடங்கிவிட்டனர். அத்தனை கோபிகைகளின் பாததூளிகளை ஒன்று சேர்த்து ஒரு மூட்டையாகக கட்டிக் கொடுததனா. 'எங்களில உணமை யான பக்தை யாரெனறு தெரியவில்லை. எலலோருடைய பாதத்தூளிகளை யுமே தநதிருக்கிறோம்' என்றார்கள.

"உஙகள் பாததூளி பகவான தலையில பட்டால அந்த தோஷத் தால் நீஙகள் நரகத்துகல்லவா போவீர்கள்?" எனறார் நாரதர். "நாங்கள் நரகம் போனால் பரவாயில்லை. பகவானின சங்கடம நீஙகினால் போதும்" என்று கோபிகையா பதில் தநதனர்.

பக்தியின் பிரேமையை உணர்ந்தார் நாரதர். பாமா—ருக்மணி இருவரும் தமது தவற்றை உணாநது கொண்டனா.

—**தொகுப்பு:** திரு. சோ. ரஙகசுவாமி — நாட்டரசனகோட்டை.

### தலசயனம—கடல்மல்லை எனனும மாமல்லபுரம்

கடல் மல்லையின் கடற்கரையில் புண்டரீக முனிவர் ஓர் அற்புத நந்தவனம்அமைத்துப்பேணி வந்தார். பாற்கடலில் பள்ளி கொண்ட அண ணலின் திருவடிகளில் அம்மலர்களைச் செலுத்த விழைகிறார். இடையி லுள்ள மல்லைக் கடலைக் கையால் இறைத்தே வற்றச்செய்ய முயன்றார். திருமால கூலியாளாகத் தோன்றிச் சிறிது உணவு அளித்தால் இப்பணி யில உதவுவதாக உறுதியளித்தார். உணவு கொண்டு வரச்சென்ற முனி வா திருமபியபோது சங்கு, சக்கர கதாதாரியாகத் திருமால் தரையில் படுத்திருககக்கணடாா. கடல் நீர் வற்றியிருந்தது. பாம்புப்படுக் கையை விடுத்துத் தரையில் படுத் திருப்பதால் இதனைத் தலசயனம் என் பர். மாமல்லை நகரிலுள்ள தலசய னப் பெருமாள் கோயில் பிற்காலத் தில் எழுந்தது. மகிஷாசுரமர்த்தினி குகையிலும், கடற்கரைக் கோயிலி லும் பளளிகொணட பெருமாளின் திருவுருவஙகள உள்ளன. திருமங்கை யாழ்வார், பூதத்தாழ்வார் ஆகியோர் கடற்கரைக கோயிலிலுள்ள ஆதி பிரானையே மங்களாசாசனம் செய்த னர் என்று கூறுவர்.

### மாணிக்க சயனம் - திருநீர் மலை

சென்னையின புறநகர்ப்பகுதியான பல்லாவரததிற்கு அருகேயுள்ள திரு நீர்மலை பூதத்தாழவார், திருமங்கை யாழ்வார் ஆகியோரின் பாசுரங்கள் பெறற தலமாகும. மலைமேலுள்ள கோயிலில் திருமால் மாணிக்க சயன ராக 'அரங்கநாதன்' என்ற பெயரு டன் காட்சியளிககிறார்.

(அடுத்த இதழில் முடியும்)

# நவராத்திரி

திரு. கா. மு. பாபுஜி, M.A. M.Phil,
திருப்பதி.

நவராத்திரி என்பதை நவ+ ராத்திரி எனப் பிரிக்கலாம். நவ என்பதற்கு ஒன்பது என்றும், ராத்திரி என்பதற்கு இரவு என்றும் பொருள் ஒன்பது இரவுகள் நோன்பு இருந்து பூசை செய்து மக்கள் கொண்டாடுவர் நோன்பு முடியும் பத்தாவது நாளைக் கணக்கில் கொண்டு வடநாட்டர் இதை "தசரா" என்று கொண்டாடுகின்றனர். நவராத்திரி சுக்கிலபட்சப் பிரதமையில் ஆரம்பித்து 'தசமி'யில் முடியும். அதாவது புரட்டாசி மாதம் அமாவாசையைத் தொடர்ந்து வருகின்ற ஒன்பது நாட்களையே நவராத்திரி என்று கூறுவர். மற்ற இரவுகளுக்கு இல்லாத ஒரு தனிச் சிறப்மையும், மனஅமைதியையும் இந்த ஒன்பது இரவுகளில் மக்கள் பெறுகின்றனர்.

'சரத்கால' சம்பந்தம் பெற்ற ஆச்வின் மாதத்தில் வருவதால் இதற்குச் "சாரதா நவராத்திரி" என்று அழைப்பர். இதுதான் அனைவராலும் கொண்டாடப்படும் நவராத்திரி இதேபோல "வசந்த நவராத்திரி" என்று மற்றொன்று உண்டு. இது சைத்திர (சித்திரை) சுக்கிலப் பிரதமையில் இருந்து தொடங்கி தசமியில் முடியும். இது தேவி உபாசகர்களால்மட்டும் கொண்டாடப்படும் நவராத்திரி ஆகும். துர்க்காதேவியை 'சாரத' நவராத்திரியில் சண்டிகா என்ற தன்மையிலும், வசந்த நவராத்திரியில் 'ரக்த தந்திகா' என்ற முறையிலும் பூசை செய்ய வேண்டும் என்பது இந்துக்களின் கொள்கை ஆகும்.

சரத்து, வசந்தம் என்ற இவ்விரு ருதுவும் எமனுடைய இரு கோரப் பற்கள். இவற்றால் இக்காலத்தில் அம்மை, காலரா முதலிய நோய்கள் அதிகமாய் மக்களை நாசமடைய செய்யும். இதைப் போக்க நவராத்திரியில் துர்க்கா பூசை செய்ய வேண்டும் என்று தேவி புராணம் கூறுகிறது. தேவி, மகிஷன் என்ற அசுரனைப் போரில் வென்று, ஆச்வின் சுக்கிலத்தில் அபிஷேகம் செய்யப் பெற்றாள். இந்தக் காரணத்தாலும் சாரத நவராத்திரியில் தேவியைப் பூசிக்க வேண்டும் என்று கூறுவர்.

தமிழ் நாட்டில் மட்டுமின்றி மைசூரிலும், வங்காளம் முதலிய இடங்களிலும் தசராவாக சிறப்பாக கொண்டாடுகினறனர். இந்நாட்களில் கடலைத் தேடி நதிகள் வருவது போல் எங்கும் உள்ள மக்கள் இவ்விடங்களுக்கு வந்து சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். மைசூர் இந்தஒன்பது நாட்களின் போது ஒரு பேரொளி நகரமாய்க் காட்சியளிக்கும். அங்கு மலைமேல் எழுந்தருளியிருக்கும் அன்னை சாமுண்டீச்வரி தெய்வத்தைக் குறித்து நடைபெறும் விழாவாக நவராத்திரி அமைகிறது. இதே போல் கல்கத்தாவில் இருக்கும் துர்க்காதேவிக்கும் இந்த ஒன்பது நாட்களில் பெரு விழா நடைபெறும் இந்தியாவில் துர்க்கை வழிபாட்டிற்குத் தலைசிறந்த இடமாக வங்காளம் திகழ்கிறது.

நவராத்திரி பூசை நித்தியகாமியம் என்ற விதிக்கு உட்பட்டது. எனவே இதை இந்துக்கள் அனைவரும் வழிபட வேண்டும் என்று புராண நூல்கள் கூறுகின்றன. குழந்தையின் அழுகை தாய்க்குத்தான் புரியும். அதுபோல் மக்களின் கூக்குரல் அன்னை துர்க்கைக்குப் புரியும். அதற்கு ஏற்ப அருள் புரிவாள். இவ்வாறு ஒன்பது நாட்கள் பூசை செய்யும் சக்தியற்றவர்கள் சப்தமி, அஷ்டமி, நவமி என்ற கடைசி மூன்று நாட்களாவது பூசிக்க வேண்டும். இவ்வாறு செய்ய இயலாதவர்கள் கடைசி நாளான 'நவமி' அன்றாவது பூசை செய்ய வேண்டும். இவ்வாறு செய்தால் இம்மையில் எல்லா நன்மைகளோடும் மறுமையில் வீடு பேறும் கிடைக்கப் பெறுவர்.

கலசம் அமைத்து நவதானியங்களைச் சுற்றிலும் தெளித்துக் கலசத்தில் துர்க்கையை அமர்த்திப் பூசை செய்ய வேண்டும். பூசையின் அங்கமாகத் தேவி 'சப்த சதி' என்ற தேவி

(48-ம் பக்கம் பார்க்க)



திருமதி. என். அன்னபூர்ணா.

# மின்னு புகழ் வில்லிபுத்தூர்

மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களால மங்களா சாசனம் செய்யப்பட்ட 108 திவ்ய தேசங்களில் ஸ்ரீ வில்லிபுத்தூர் சிறப்பு வாய்ந்ததாகும். இங்குப் பரமனுக்குப் பல்லாண்டு பாடிய பெரியாழ்வாரும், அவர் மகளாய்த் திருப்பாவை பாடிய ஆண்டாளும் அவதரித்தனர். மணவாள மாமுனிகள் என்னும் ஆசாரியர் தாமருளிய உபதேச ரத்ன மாலையில் இத்தலத்தைப் பெரியாழ்வார அவதரித்த தலமாகக் கூறுமபோது 'மின்னு புகழ் வில்லிபுத்தூர்' என்றும், ஆண்டாள் அவதரித்த தலமாகக் கூறும்போது 'சீராரும வில்லிபுத்தூர்' என்றும உரைப்பர். இதற்கு உரையிட்ட பிள்ளை லோகம்சீயர் என்னும் ஆசாரியர், "மின்னு புகழாவது: 'பாரார் தொல் புகழான பட்டர்பிரான்' வந்து அவதரித்தருளுகையாலே திக்குக்களிலே ப்ரகாசமான யசஸ்ஸையுடைத்தாயிறே ஸ்ரீ வில்லிபுத்தூர் இருப்பது" என்பர். 'சீராரும வில்லிபுத்தூர' என்பதற்கு, "ஸம்பத் ஸம்ருத்தியையுடைய வில்லிபுத்தூர. அதாவது பொன்னும் மணியும் முத்தும் சேர்ந்தாற்போலே பொன்னடியையுடைய வில்லிபுத்தூருறைவானையும், மணி வல்லி என்னும்படி ஸ்த்ரீ ரத்னமான நாச்சியாரையும், முக்தாகரமான சோதியிலே அவதரித்து 'இக்கரையேறி இளைத்திருந்தேன' என்னும்படி ஒரு கரை சேர்ந்திருக்கிற முக்த ப்ராயரான ஆழ்வாரையும உடைத்தாயிருக்கையாலே எல்லையற்ற நித்ய ஸ்ரீயையுடைத்தாயிருக்கை" என்பர். முத்துச்சிப்பியில் ஸ்வாதி (சோதி)யன்று மழைத்துளி விழுந்தால் அது முத்தாக மாறும். ஆகையால் முக்தா-கரமான (=முத்தை உண்டு பண்ணுகிற) சோதியில் அவதரித்தவர் பெரியாழ்வார் என்க. முத்தைப்போல பரிசுத்தர் ஆழ்வார் என்பது அதன் தேர்ந்த கருத்து.

இத்தகைய ஏற்றத்தையுடைய வில்லிபுத்தூர் வரலாற்றை வடிவமைத்த நம்பிதாசர் என்னும் அடியவர் அருளிய ஆழ்வார்கள் வைபவம என்னும் நூல்வழி நன்கு அனுபவிக்கலாம.

திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட பரமன திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் திருவடி தொழ மற்றெல்லாரும் துதித்திருக்கும் சமயத்தில் மண்மகள் பரமனை நோக்கி, 'உலகிலுள்ள பல்வகை உயிர்களில யாவரிடம் தாங்கள நல்லவராக விளங்குகிறீர்' என வினவினாள். உடனே பரமனும, உயர்ந்த பாமாலையும் பூமாலையும் சூடிக்கொடுப்போரிடம் தாம் அங்ஙனம் உள்ளதாகக் கூறினர். மணமகளும் அத்தகைய மகத்தான தொண்டில் தாமும் ஈடுபட்டுப் பரமனை மகிழ்விப்பதே பேறு எனக்கருதி இறைவனின் நியமனத்தின் பேரில் பூவுலகில் அவதரிக்க ஆசை கொண்டாள்.

வேதம் முதலான சாத்திரங்களை அத்தாட்சியாகக் கொண்டது வைதிக மதம். இந்த மதம் பலவாறாக இருப்பினும் அவற்றுள தலை சிறந்தது ஸ்ரீ வைஷ்ணவ மதம். இம்மதத்தில தோன்றிய விஷ்ணுசித்தர் என்னும பெரியாழ்வார் தம நந்தவனத்தில் திருத்துழாய்க்குக் கொத்தா நிற்க, அத்திருத்துழாய் மண்ணின் கீழ் அவதரித்தவள மண்மகள். இவளே ஆண்டாள் எனச் சிறப்பாகப் பெரியாழ்வாரால வளர்க்கப்பட்டவள். இவள் வாழ்ந்த வில்லிபுத்தூரின் பெயர்க் காரணமும் சிறப்பும் பின்வருமாறு:

சேதுவுக்கும் குமரிக்கும் அருகே பொதிய மலையின் கிழக்குப் பகுதியில் ஒரு பெரிய இடத்தில் இறைவன் மண்மகளுக்குத் தீங்கிழைத்த இரணியாட்சனைப் போரில் வென்றார். மணமகளின் மகிழ்ச்சி காரணமாக அவளுடன் பொருந்தி இருந்ததால அத்தலம் சீர்மை பெற்று வராகக்ஷேத்ரம் என்ற பெயரும் பெற்றது.

பல காலம் கழிந்ததால் அத்தலம் பெரிய காடாய் மாறியது. அதில் விலங்குகள் தங்கள் பகைமையை மறந்து அருளுள்ளம கொண்டு ஒற்றுமையாய் வாழ்ந்தன. மார்க்கண்டேயர் முதலான முனிவர்கள நீண்ட காலம் குற்றமில்லாத தவங்களைப் பக்தியுடன் செய்து வந்தனர். அந்நாளில் காலநேமி என்னும் கொடிய அரக்கன் அம்முனிவர்களைத் துன்புறுத்தினான். அதனால் அம்முனிவர்கள திருப்பாற்கடலில் துயிலும் இறைவனிடம் தங்கள் துன்பங்களைப் போக்க வேண்டினர். இறைவனும் அந்த நிமிடமே தம் ஒப்பற்ற கருடன் மேலேறி அத்தலத்திற்கு விரைந்து வந்து அரக்கன் சேனையோடு போர் புரிந்தான. ஈரேழுலகமும அதிரும்படி இறைவன் தன திருநேமியால காலநேமியை உயிர் துறக்கும்படிச் செய்தான. அவன உடம்பினின்றும் இரத்தம் பெருகிய திருநேமியில் கறை படியவே அக்கறையைப் போக்க, இறைவன் ஆணைப்படி வருணன் போர்க்களத்திற்கு வந்து, கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய புண்ணிய நதிகளின நீர் கொண்டு திருநேமியைத் தூய்மையாக்கினான. இம்மூன்று நீரும் ஒருங்கே கலந்து ஒரு குளமாயிற்று. அந்தக் குளம, திருமுக்குளம என்ற பெயர் பெற்றது.

டாக்டர். மா வரதராஜன்,
திருப்பதி.

அக்கொடிய அரக்கனைக் கொன்றதனால் தேவர்களும் முனிவர்களும மற்றுமுள்ள பக்தர்களும் இறைவனை வாயார வாழ்த்தி, மனமாரத் துதித்துக் கைகள் படைத்த பயனைய் வணங்கி, தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தனர். அதாவது, மிக்க வலிமையுடைய சக்கரத்தால் அரக்கனைக் கொன்று தங்கள் இடரைத் தீர்த்ததால், அக்களைப்புத் தீரப் பாற்கடலில் பள்ளிகொண்டு எழுந்தருளுவது போல் தாங்களிருக்கும இடத்திலும் பாம்பணைமீது பள்ளி கொண்டு திருவடியில் மண்மகளும் திருமுடியில் பூமகளுமாகக் காட்சி தருமாறு இறைஞ்சினர். இறைவனும் அவ்வண்ணமே இருப்பதாக இசைந்தனர்.

இறைவன் தான முன்பொரு கால் உலகையெல்லாம் பிரளய காலத்தின் போது தன் திருவயிற்றில் அடக்கிக் காத்தான். அப்போது சிறு குழந்தையாகிப் பள்ளி கொண்டுள்ளதுபோல் தன் வடிவைச சுருக்கி அதற்கேற்றாற் போல் அரவாகிய ஆதிசேடனையும் மாற்றி அவவிடத்திலேயே ஒரு கோயிலில் சயனித்து பூமகளையும் மண்மகளையும் முறையே திருமுடி திருவடிகளில் அமர்த்திக் காட்சி தந்தான். அதனைப் பார்த்த தேவர்களும் முனிவர்களும் மறற பகதர்களும் மனமுருகி யாவராலும் செயற்கரிய செயலைச் செய்யும ஆற்றல் படைத்த திருமாலை வணங்கினர். சிறு குழந்தை போல் ஆலிலையில் சயனித்திருந்த காரணத்தால் 'வடபத்ரசாயி' என்றும், அவன் கோயில் கொண்டுள்ள இடம் 'வடவேச்வரபுரம்' என்றும் பெயர் பெற்ற தாயும மேன்மையான முனிவர்கள் கூறுவர்.

பல யுகங்கள் கழிந்த பினபு அவவிடத்தில ஒரு புதிய ஊர் தோன்றியது. அவ்வூரில் வேதம் முதலான பல கலைகளில் வல்லவராக விளஙகிய அந்தணர் குடும்பங்களும், அவர்கள் பக்கலில் வேடுவனைத் தலைவனாகக் கொண்ட வேடுவக் குடும்பங்களும் வசிக்கலாயினர். அவ்வேடுவக் குடும்பத்தில் தோன்றிய 'மல்லி' என்ற பெண்ணுக்கு 'வில்லி, கண்டன்' என்ற இரு புதல்வாகள் இருந்தனர். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்த இருவரும் இளமைப் பருவத்தில் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றனர். அக்காட்டில்தான் இறைவன் மேற்கூறியவாறு பள்ளி கொண்டிருக்கிறானென்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

வேட்டைப் பணியில் நாட்டம் கொண்ட வேலேந்திய கண்டன ஒரு புலியைத் தொடர்ந்து போக, அது வேறொரு புதரிலிருநது இவன்மீது பாய்நது மார்பைப் பிளந்து இரத்தத்தைப் பருகிவிட்டுத் தன புதரையடைந்தது. பினனர், தம்பியைக் காணாததால் வில்லி காடேற வநது அவன் புலிக்கு இரையானதைக் கண்டு மயங்கி வீழ்ந்தான். அநநிலையில் இறைவனருளால் மயக்கம தெளிந்த பின்னர், இறைவன் அவன் கனவில் தோன்றி 'தான் கண் வளர்ந்தருளும் ஊரைப் புதுப்பித்தால் எல்லாப் பாபங்களும் போம்' என்று கூறினர். வில்லியும் கனவிலேயே இறைவனிடம் தம் தம்பியை உயிர்ப்பிககுமாறும் அந்த இடத்தைப் புதுப்பிக்கப பெருநிதியைப் பெறும் உபாயத்தைக் கூறுமாறும் வேண்டினன்.

திருமாலும் வில்லியின் தம்பியான கண்டனை உயிர்ப்பித்து அவனைக் கொனற புலியைக கொன்று, அது இருக்கும் குகையில் மிகுதியான செல்வம் இருப்பதையும் வில்லிக்குக் காட்டித் தந்தார்.

வில்லியும் தன் கனவின் பயனைத் தனக்கு நல்வாழ்வு கிட்டியது பற்றித் தன் தம்பியை மனமாரத் தழுவி, தான் கண்ட கனவு பற்றி அவனிடம் கூறி, அருகேயுள்ள மரக்கிளையில் இருக்க, அவ்விடத்திலேயே கண்டனைக் கொன்ற புலி இறந்திருப்பது கணடு இறைவன செயலை நினைத்து உருகினன். மேலும் அக்குகையில் அளப்பரிய செல்வம இருப்பதைக் கண்டு வியநது இறைவன் இருக்கும் கோயிலைத் தேடிச் சென்றான். அந்தக் காட்டில், ஓரிடத்தில், உயர்நது வளர்ந்த ஆலமரத்தின்கீழ் இறைவனைத் தாங்கி நிற்கும் ஆதிசேடன்,

## சந்தாதாரர்களுக்கு . . .

30-11-89—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தஙகள சநதா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்

48 [illegible]2A 6[illegible] 67 98 117 119 121 123 124 125 209 248 249 345 408 418 422 423 425 429 430 431 437 438 565 577 582 844 847 849 855 869 870 1961 2093 2108 2129 2130 2131 2139 2140 2143 2144 2158 2163 2167 2177 2183 2187 2189 2202 2204 2221 2222 2229 2236 2277 3571 3582 3583 3587 3588 3589 3593 3595 முதல் 3598 3600 3601 3604 3607 3608 3611 3613 3615 3618 3620 3622 3623 3626 3628 3634 3638 3642 3649 3981 4784 முதல் 4822 4824 4827 முதல் 4851 4853 முதல் 4864 4866 முதல் 4874 4876 4877 4878 4880 4881 4883 4885 முதல் 4897 4899 4901 முதல் 4911 4913 4915 4917 4918 முதல் 4931 4944 4946 4947

திருமடந்தையையும் மற்றும் நித்திய சூரிகளையும் வியப்பு மேலிடக் கண்டு தன் தம்பியை நோக்கித் தான் கன வில் கண்ட இறைவன் அவ்விடத் திலே இருப்பதைக் கூறினான். பினபு திருவாழி திருச்சங்கினோடும் தாம ரைக் கண்களோடும் கொவ்வைச் செவ்வாயும் பொருந்தியிருக்கும் இறைவனையும், திருமகளையும், தொண்டர் குழாங்களையும் கண்டு களிப்புற்று பிறவி படைத்த பயன் அவனைச் சரணமடைதலே என்று இறைவன் திருவடியில் இறைஞ்சி இருவரும் வணங்கினர்.

இறைவனின் வடிவழகில் ஈடுபட்ட வில்லி அவ்விடத்தை விட்டு அகல மனமில்லாமல், இறைவனையும் அவ னது பக்தர்களையும் அவ்விடத்தில் குடியேற்ற எண்ணினான். அதற்காக, அவ்விடத்தைவிட்டு அருகிலுள்ள புத்தூருக்கு வந்து சேர்ந்தான். அங குள்ள குற்றமற்ற அந்தணர்களிடம் நடந்த செய்திகளைக் கூறி அவர்களை அவ்விடத்தில குடியேறஅழைத்தான். அவ்வந்தணர்களும் அநத இடத்திற்கு தங்களது ஊரான புத்தூர் என்ற பெயரை வைத்தால் தாங்கள் வரு வதாகக் கூறினர். அதற்கு வில்லி யும் ஒப்புக் கொணடு அவர்களை அவ் விடத்தில் குடியேறச் செய்தான். தான் அவ்விடத்தைப் புதுப்பித்த தனால் வில்லி என்ற தன் பெயரோடு அவர்கள் விருமபிய ஊரான புத்தூர் என்ற பெயரையும சேர்ந்து 'வில்லி புத்தூர்' எனறு அதற்குப் பெயர் வைத்தான். அழகு மிக்க அந் நாட்டை, தன் தாயான மல்லியின் பெயரையும் சேர்த்து 'மல்லி நாடு' என வழங்கலானான். பின்பு திருவநந் தாழ்வான், அழகிய மண்மகள் பூ மகள் ஆகியவரோடு திருமாலின அர்ச்சை வடிவை முறைப்படி புதுப் பித்துப் புலிகுகையில் இறைவன் காட்டிய செல்வத்தைக் கொணடு அழகிய கோயிலாகக கட்டினான். வலிமையும் புகழும் மிக்க வில்லி பழைய நகரைப் புதிய நகரமாககிய தால் 'புதுவை' எனறும் அந்நாட் டிறகு சிறப்புப் பெயர் வந்தது.

இத்தகைய வில்லிபுத்தூரில் அல்லி நாட்டாமரை மேலாரணங்கின் துணைவியாயும், மல்லிநாடாண்ட மட மயிலாயும, மெல்லியலாளாயும், ஆயர் குல வேநதனுகத்தாளாயும், தென் புதுவை வேயா பயந்த விளக் காயும், பூமிபபிராட்டியான ஆண டாள அவதரிக்கவே, அவ்வூர் ஸ்ரீ வில்லிபுததூர் எனச்சிறப்புப் பெயர் பெறலாயிற்று.

இத்தகைய வரலாறு படைத்த ஸ்ரீ வில்லிபுத்தூர் நீர் வளமும், நிலவள மும், மாடஙகள் வளமும், பொழில் வளமும், மறையவர் வளமும் பெற்று பொலிந்து விளங்கியது. ஆண்டாள அருளிய திருப்பாவை 30ம பாட்டில் 'அணி புதுவை' என்பதற்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிய ஆறுயிரப்படியில் ஸ்ரீ வில்லி புத்தூரின் பெருமை கூறப்பட்டுள் ளது. அதாவது "பொனனும் முத்தும் மாணிக்கமுமிட்டுச் செய்த ஆபரணம் போலே நாய்ச்சியாரும் பெரியாழ் வாரும் வடபெருங்கோயிலுடையானு மான அலங்காரமுள்ள தேசமிறே" என்பர். முத்து உள்ளும் புறமும் தூய்மை பெற்றது. அம்முத்தை உண்டாக்கும் ஸ்வாதியன்று அவ தரித்த முத்தாகிற ஆழ்வாரும் உளள மும உடலும தூய்மை பெறறவர். ஆழவாருககு இததன்மை வந்த மைக்குக் காரணம் ஸ்வாதியின் பெரு மையேயாகும். கடலில் முத்துச் சிப்பியில் ஸ்வாதியனறு முத்துப் பிறக்கும். புதுவையில் வேயர் குலத் தில் ஸ்வாதியில் ஆழ்வாராகிய முதது அவதரிததது. இத்தகைய பெருமை பெற்றது ஸ்ரீ வில்லிபுத்தூராகும.

இத்தகைய பேறு பெற்ற இத தலத்தை ஆணடாள் அருளிச செயல் வாயிலாகக் காணும்போது, 'தென புதுவை', 'மச்சணி மாடப் புதுவை', 'பாாமலி தொல் புதுவை', 'பொன திகழ் மாடப் புதுவை', செற்றமிலா தவர் வாழ்தரு தென புதுவை', 'வணடமர் பொழிற் புதுவை', 'குழல் முழவம் விளம்புமப் புதுவை', 'கோல மார் பொழில்சூழ் புதுவை', 'தண் புதுவை', 'பாராரும் புகழ்ப் புதுவை', 'புரவிமுகஞ் செய்து செந்நெலோங்கி விளைகழனிப் புதுவை', 'சேமநனகம ரும் புதுவை', 'பொன் திகழ் மாடம் பொலிந்து தோன்றும் புதுவை', 'ஒளி புத்தூர்', 'நாட்கமழ் பூம் பொழில் வில்லிபுத்தூர்', நீரணிநத குவளை வாசம் நிகழநாறும வில்லி புததூர்', 'விண்தோய் மதிள் விலலி புததூர்', 'பணபகா வில்லிபுத்தூர்' 'திருவிற் பொலி மறை வாணர் புத் தூர', 'வெங்கலி நலியா வில்லி புத் தூர்' என்று இத்தகைய பலவகைச் சிறப்புகள் அமையப் பெறறதாகக் காணலாம.

ஆணடாள் திருவடிகளே சரணம்!

(45-ம் பக்கத் தொடர்ச்சி)

மான்மிய பாராயணம் செய்ய வேண டும். இதை முதல நாள் ஒரு முறை யும், இரண்டாம் நாள இரண்டு முறையும், இவ்வாறு ஒன்பது நாட் கள் செய்ய வேண்டும இநத ஒனபது நாட்களில் முதல் மூன்று நாட்கள 'துர்க்கையையும்' இரண்டாம் மூன்று நாட்கள் 'இலக்குமியையும்' கடைசி மூன்று நாட்கள் 'சரசுவதியையும்' பூசை செய்ய வேண்டும்.

வீடுகளில் பெணகள் பொம்மைக் கொலு வைப்பார்கள. இது ஒரு கண்காட்சியாக இருக்கும். கிருஷ்ணன் முதலிய கடவுளர்களின பொம்மை களை அலங்கரித்து மக்களின வசதிக்கு ஏற்ப பல வரிசையில் கொலு வைப் பார்கள். பலரை அழைத்து இவற் றிற்குப் (கொலுவுக்கு) பூசை செய்து கொண்டாடுவா. முடிவில் பெண களுககு மஞசள், குங்குமம், தாலி முதலிய மங்கள பொருட்களைக் கொடுப்பர் இறுதி மூன்று நாள, சரசுவதியைக் கொணடாடுவதால் பள்ளியில் படிககும பிள்ளைகள தங களுடைய பாட புததகங்களுககுப பொட்டு இட்டு வழிபடுவர். எனவே இதனை 'கலைமகள் விழா' அல்லது 'சரஸ்வதி பூசை' என்று வழங்குவர். மறுநாள் உழவர், தொழிலாளர்கள் தம் வாழ்நாட்களில் தமககு உதவிய தொழிற் கருவிகளைச் சுத்தம் செய்து வரிசையாக வைத்து வழிபடுவார்கள். ஆகவே இதனை 'ஆயுத பூசை' எனறு அழைப்பர். அனறு உயிா பலிக்குப் பதில் பூசணிக்காயை உடைப்பா. பிறகு தமமிடம் வேலை செய்யும் தொழிலாளருககு வேட்டி, புடவை ஆகியவற்றையும, வேறு சில பொருள் களையும அனபளிபபாக வழஙகுவார் கள்.

இத்தகைய நவராத்திரி விழாவை விசயநகரப் பேரரசாகள அவர் களிடம் சிறறரசர்களாக இருநத மதுரை நாயக்க மன்னர்கள் ஆகியோர் தமிழ் நாட்டில பரப் பினர் என்று தமிழ் அறிஞர்கள் கூறு கினறனா. நவராததிரியை நல்ல உள ளம் பெற்ற எல்லோரும் நல்லமுறை யில் கொணடாடி இம்மையிலும, மறுமையிலும நன்மை பெறுவர்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED

